# சத்துமிகுந்த, சுவையான பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்

## வளரும் குழந்தைகளுக்கு சுவையான துணை

பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள் அருமையான தனிச் சுவையோடு மேம்பட்டு விளங்குவது ஏன்? சத்துச் செறிந்த ஆரோக்கியமான குணச்சிறப்பே காரணம். ஆசையோடு குழந்தைகள் அவற்றை விரும்பிச் சுவைத்து வளருகின்றனர்! பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்— வளரும் குழந்தைகளுக்குச் சுவையான துணை.




**பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை**

லின்டாஸ்-BBC.GLX 6-140 TM

பின்னி கூட
என்றும்
மாற்ற விரும்பாத
சில பொருட்கள்
உள்ளன!

## நல்ல வேளை,
## சில பொருட்கள் என்றும் மாறுவதே இல்லை!

இந்த நாட்களில் இயல்பான நிலைகளின் தோற்றத்தையும் பின்னியின் தரம் என்றும்போல் நம்பிக்கையூட்டுவதையும் காணும்போது களிப்படைகிறோம். பின்னி உயர்ந்த நாகரீகத்தையும் நீடித்த உழைப்பையும் எப்படி இணைத்துத் தருகிறது என்பதைப் பாருங்கள். எண்ண முடியா வண்ணங்கள்! அள்ள முடியா கோலங்கள்! பின்னி பாலியெஸ்டர் இழை கலந்த தரமான ஆடைகளை அணிந்து களிப்படைவீர்.



நாகரீகம், அத்துடன் நீடித்தும் உழைப்பவை,— பின்னி மட்டுமே நயமுடன் இணைத்துத்தர முடியும்!

**பின்னி** பாலியெஸ்டர் இழைகலந்த துணிகள்

Interpub/BB/55/75 Tam

ஆடிடுவோம் பாடிடுவோம்,
கோல்ட் ஸ்பாட்
பருகிடுவோம்



# கூந்தலுக்குச் சாயம் பூசுவது பற்றி எல்லா விவரங்களும் உங்களுக்குத் தெரிய வேண்டுமா?

## மகிழ்வோடு விடையளிக்கக் காத்திருக்கிறது கோத்ரெஜ்

இளம் வயதில், சில சமயம், சற்று முன்னதாகவே நரை தோன்றி விடலாம். அந்த சமயம் ஒவ்வொருவர் ஒவ்வொரு மாதிரி நடந்து கொள்வார்கள். சிலர் அதை விளையாட்டாக எடுத்துக் கொள்வார்கள், சிலர் அதைப் பெரிது படுத்துவார்கள். ஆனால் பெரும்பாலோர் அதற்காக ஒன்றுமே செய்வதில்லை. வருந்தத்தக்க விஷயம். காரணம், நரைத்த கூந்தலைக் கருமையாக்கி விடலாம்—மிக மிக எளிதாக.

**கே: எப்போது கூந்தலுக்குச் சாயமேற்றத் தொடங்க வேண்டும்?**

ப: முதன்முதல் நரை இழைகள் தோன்ற ஆரம்பித்த உடனேயே பூசுவதுதான் சிறந்தது.

**கே: தொடர்ந்து கூந்தலுக்குச் சாயமேற்றி வந்தால், அது கேசத்தைப் பாதிக்கும் என்பது உண்மையா?**

ப: இல்லை. ஆனால் நீங்கள் சிறந்த ஹேர் டையைத் தேர்ந்தெடுக்க வேண்டும். கோத்ரெஜ் ஹேர் டையில் சேர்க்கப் பட்டுள்ள விசேஷப் பொருட்கள் கூந்தலுக்கு உருக் கொடுப்பதோடு அதில் உள்ளடங்கியுள்ள கண்டிஷனர்கள், உங்கள் கூந்தலை அழகாகவும் பளபளப்பாகவும் வைத்திருக்க உதவுகிறது.

**கே: அது சருமத்தைப் பாதிக்குமா?**

ப: பொதுவாக பாதிக்காது. ஆயின், முதலில் ஒரு சிறிய சருமப் பரிசோதனை செய்து பார்த்து விடுவது நல்லது. எந்த சிறந்த ஹேர் டையுடனும் இப் பரிசோதனையை எப்படிச் செய்வது என்ற குறிப்புகள் இருக்கும்.

**கே: பர்மனெண்ட் ஹேர் டை எத்தனை நிரந்தரமானது?**

ப: சாயமேற்றிய கூந்தலில் பல வாரங்கள் சாயம் நீடித்திருக்கும். ஆயினும் புதிய கேசம் முளைக்கத் தொடங்கிய உடனேயே மூன்று அல்லது நான்கு வாரங்களுக்குப் பின்னர் நரை முடிகளை மீண்டும் சாயமேற்ற வேண்டும்.

**கே: டையின் சாயம் துணிகளையோ தலையணைகளையோ கறைப்படுத்துமா?**

ப: நிச்சயமாக இல்லை. இதர பெரும்பான்மையான ஹேர் டைகள் போல, கோத்ரெஜ் ஹேர் டை கூந்தலில் மேற்பூச்சாக சாயமேற்றுவதில்லை. அது கேசத்தின் அடிவேரினுள்ளே ஊடுருவிச் சென்று தங்குகிறது.

**கே: கூந்தலுக்குச் சாயமேற்றிய பின்னர், என் கேசத்தைச் சாதாரண கேசம் போல் நடத்தலாமா?**

ப: நிச்சயமாக, ஷாம்பூ உபயோகித்து, கூந்தலை அலசலாம். எந்த ஹேர் ஆயிலையும் க்ரீமையும் உபயோகிக்கலாம்.

**கே: வீட்டிலேயே கூந்தலுக்குச் சாயமேற்றுவது எளிதா?**

ப: சந்தேகமே வேண்டாம். உபயோகிக்க மிக மிக எளிது கோத்ரெஜ் ஹேர் டை: டையை மென்மையாகத் தடவினால் போதும். அது தானே சமமாகவும் சீராகவும் எளிதாகச் சருமத்தின் ரோமக்கால்களிடையே ஊடுருவிப் பரவுகிறது.

CMGS-84-175 TM

கே: எல்லா ஹேர் டைகளுமே உபயோகிக்கக் கடினமா?

ப: அப்படிச் சொல்ல முடியாது. கோத்ரெஜ் ஹேர் டை உபயோகிக்க வசதியானது. இனிய நறுமணம் கொண்டது. மிக மென்மையானது.

கே: அது மிக விலையுயர்ந்ததா?

ப: தோள் அளவு கூந்தல் உங்களுக்கு இருந்தால் ஒரு குப்பி ஹேர் டையும் டெவலப்பரும் கிட்டத்தட்ட மூன்று மாதங்கள் வரும். அதுவும் நீங்கள் வீட்டிலேயே சாயமேற்றிக் கொண்டால் மாத மொன்றுக்கு சுமார் ரு. 3/- செலவாகும்.

கே: சாயமேற்றியபின் என் கூந்தல் இயற்கையான கருமை நிறம் பெறுமா?

ப: நிச்சயமாக. ஆனால் உங்கள் கூந்தலின் இயற்கையான நிறத்திற்கு ஏற்ற வண்ணத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும். உங்கள் கூந்தல் இள நிறமுடையதாக இருந்தால் கோத்ரெஜ் கரும் பழுப்பு ஹேர் டையை உபயோகிக்கவும்.




# கோத்ரெஜ்

பர்மனெண்ட் ஹேர் டை இதர ஹேர் டைகளை பிந்தியவைகளாக்கி விட்டது.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் கூட இயற்கையான கருமை, கரும்பழுப்பு.

# இப்போது உபயோகித்துப்பார்க்க சலுகை ரூ. 1/- தள்ளுபடி

கோத்ரெஜ் பர்மனெண்ட் ஹேர் டை வாங்கும் போது

இங்கே வெட்டவும்

இந்தக் கூப்பனை வெட்டியெடுக்க. விவரங்களைப் பூர்த்தி செய்க. உங்கள் கோத்ரெஜ் விற்பனையாளரிடம் சென்று, கோத்ரெஜ் பர்மனெண்ட் ஹேர் டை—இயற்கையான கருமை அல்லது கரும்பழுப்பு—மீது ஒரு ரூபாய் தள்ளுபடி பெறுங்கள். ஏதாவது ஒரு பேக் வாங்குகையில் ஒரு முறை ஒரு கூப்பன்தான் உபயோகிக்கலாம்.

விற்பனையாள அன்பரே,

இந்தத் தள்ளுபடிக் கூப்பனை 30-11-1976 வரை ஏற்றுக் கொள்ளவும். எங்கள் பிரதிநிதி அல்லது விநியோகஸ்தரிடம் 31-12-1976 க்குள் அவற்றைக் கொடுக்கவும்.

பெயர்: ______________________

______________________

விலாசம்: ______________________

______________________

இந்த தள்ளுபடிக்கூப்பனைக்கொடுக்கும்போது, அதே அளவு எண்ணிக்கை கோத்ரெஜ் பர்மனெண்ட் ஹேர் டை பேக்குகள் நீங்கள் வாங்கும் பட்சத்தில், ஒவ்வொரு தள்ளுபடிக் கூப்பனுக்கும் ரு. 1 என்ற விகிதத்தில் (சேவைக் கட்டணமாக 10 பைசா சேர்த்து) உங்களுக்குப் பணம் திருப்பித் தரப்படும்.

**சலுகை 30-11-1976 வரையே.**

X.M.

# கிளர்ச்சியூட்டும் காட்டன்ஸ் அளிப்பதோ சென்சுரி

**சூட்டிங்குகள்** — கற்பனை வளம் நிறைந்த டிசைன்களும் சென்சுரி பருத்தியின் குளுமையான சுகமும் பரிபூரணமாக இணைந்தவை

**ஷர்ட்டிங்குகள்**-திகைக்க வைக்கும் கோடுகள் மனதை மயக்கும் கட்டங்கள். எண்ணற்ற தினுசுகள்-இவை எல்லாமே சேர்ந்து, சென்சுரி பருத்தி எண்ணிலா வண்ணங்களில் குன்றாத ஒளி பெற்றுத் திகழ்கின்றது.

**புடவைகள்** பருத்தியின் சுகபோக இதம்-ஆம் உங்களுக்கு சென்சுரி மட்டுமே இந்த சுகத்தை அளிக்க முடியும். சென்சுரி புடவை உங்கள் எழில் உடலை ஒட்டித் தழுவ, கிளுகிளுப்பூட்டும் மகிழ்ச்சியிலே திளைக்கிறீர்கள். நெருப்பை எதிர்த்து உழைக்கும் அக்னியவிரோதக் புடவைகளும் உண்டு.

**ஆடை அணி வகைகள்** ஜீவன் ததும்பும் டிசைன்கள். கனிநடம் புரியும் வண்ணங்கள். சென்சுரி பருத்தியின் மென்மையும் உணர்ச்சியைத் தொடும் சிறப்பும் உங்களை என்றும் மகிழ்விக்கும்.

**தி சென்ச்சுரி ஸ்பின்னிங் & மான்யுபாக்சரிங் கோ. லிட்.,**
**பம்பாய் 400 025**



**சென்சுரி நூற்றுக்கு நூறு பருத்தித் துணிமணிகள்.**

national-913-Tamil










# ரம்யா

## இவர்கள் இருவரையுமே திருப்தி செய்கிறது

பொங்கி வரும் நுரை-
பொலிவு தரும் சலவை




இத்தரமான தயாரிப்பை அளிப்போர்:
அல்ட்ராமரீன் & பிக்மண்ட்ஸ் லிமிடெட், ராணிப்பேட்டை, தமிழ்நாடு
விற்பனையாளர்கள்: பாரி & கம்பெனி லிமிடெட்

SAA UP/2120

# உலகிலேயே முதன் முதலாக

# ப்ளீச் செய்யாமலே கருநிற மேனியை சிகப்பாக்கும் க்ரீம்




உலகு காணும் புதுமை: நிறத்தைக் கரைக்காமலே (ப்ளீச் செய்யாமலே) கரு மேனியைச் சிகப்பாக்கும் சாதனம் எக்காலத்திலும் இருந்ததில்லை. சருமத்தைச் சிவப்பாக்க இதுநாள்வரை செய்த முயற்சிகள் எல்லாமே குருட்டு முயற்சிகள், முரட்டு முறைகள். ப்ளீச்சுகளின் சங்கதி உங்களுக்குத் தெரியும்: இருக்கும் நிறத்தையும் கரைத்து வெளிற வைத்து விடும். அடிக்கடி உபயோகிப்பதோ ஆபத்து: காரணம், சருமத்தையே பாதிக்கும் அவற்றின் கடுங்குணம்.

விடிவெள்ளி காட்டும் விஞ்ஞான சாதனையாம் ஃபேர் அண்ட் லவ்லி இரு வழிகளில் வேலை செய்கிறது:

1. உள்ளூர வேலை செய்யும் வைட்டமின் ஒன்று அதிலுள்ளது.

இந்தக் க்ரீமை இடும்போதே, இதிலுள்ள வைட்டமின் சருமத்தினுள் இறங்குகிறது. இழைத்துத் தடவும் போதே உணருவீர்கள் இதன் செயல்-வேகத்தை; பரவும் சருமக் கருமையினை மெல்லத் திசைதிருப்புகிறது இது. வேளாவேளை ஆறு வாரங்கள் உபயோகித்துவந்தால் மேனி வண்ணம் மாறக் காண்பீர். பிறரும் காண்பார்.

2. வெளிப்புறத்திலிருந்து பாது-காப்பதற்கு, சூரிய ஒளி படாதபடி தடுக்கும் சாதனம் அடங்கியுள்ளது.

நிறம் கருப்பதற்குக் காரணமான கதிரொளியை சருமத்தின் மீது படவிடாமல் தடுத்து விலக்கி, மேனியைக் காத்திடுகிறது ஃபேர் அண்ட் லவ்லி.

சிகப்பழகு தந்து, மேலும் பல வகையில் சிறப்பூட்டும் க்ரீம் ஃபேர் அண்ட் லவ்லி.

ஒப்பனைக்கு அடிப்படையாக தினமும் ஒரு முறை இடத்தக்கது ஃபேர் அண்ட் லவ்லி; இரு முறை உபயோகித்தாலோ நிறைவான பலனுண்டு. வேளாவேளை உபயோகித்துவாருங்கள், மங்காத சிகப்பு நிறத் தங்க மேனி மனம்போல் உங்களுக்கே.

## சிகப்பான மேனியழகுக்கு மென்மையான வழி- ஃபேர் அண்ட் லவ்லி

தமிழ்நாட்டில் தேர்ந்தெடுத்த சில நகரங்களில் கிடைக்கும்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லிண்டாஸ்-FALOV-6-140 TM [R]



# போடு புதிர்!

மேலே காண்பிக்கப்பட்டுள்ள, 3 கரணைகள் உள்ள 5 சங்கிலித் துண்டுகளை இணைப்பதற்கு ஒரு கொல்லனிடம் கொடுக்கப்பட்ட போது, அவன் சிறிது யோசித்துவிட்டு நான்கு கரணைகளைத் திறக்க முற்பட்டான். இதைவிடக் குறைவான கரணைகளைத் திறந்து இணைக்க இயலுமா? **ஆர். ராஜேந்திரன்**

விடை: 3 கரணைகளைத் திறந்தாலே போதும். ஒரு சங்கிலித் துண்டில் உள்ள 3 கரணைகளைத் திறந்து மற்ற நான்கு துண்டுகளை இணைத்து விட முடியும்.



# கல்கி

1976
செப்டம்பர் 6
அநல ஸ்ரீ
ஆவணி 20









# உடன்நீச்சலும் எதிர்நீச்சலும்!

ரா. வீழிநாதன்

அடே தேவுடா !

ஹௌரா ஸ்டேஷனின் நீண்ட நெடு பிளாட்பாரத்தை அளந்து கொண்டிருந்த நான், பின்னோடு நடை பயின்று வந்துகொண்டிருந்த மார்வாடி நண்பரைக் கேட்டேன். "ஹௌராவில் பார்க்கக் கூடியவை என்ன?"

அவர் என்னை ராஞ்சியிலிருந்து வந்தவன் என்று எண்ணினாரா அல்லது கீர்ப்பாக்கத்திலிருந்து வந்தவன் என்று எண்ணினாரோ, தெரியாது. முறைத்துப் பார்த்து, மக்கள் போன்று மல்லாக்கப் படுத்துக் கைகளையும் கால்களையும் உதைத்துக் கொண்டிருந்த ஆமைகளைச் சுட்டிக் காட்டினார். புரியைச் சேர்ந்த கடற்பகுதிகளில் பிடிக்கப்பட்டு வங்காள போஜனத்துக்கு அன்றாடம் ரயிலில் பயணம் செய்து வருபவை அவை என்பதை அறிந்தேன். என் கண்கள் என்னை அறியாமல் மூடிக் கொண்டன.

"பார்ப்பதென்றால் கல்கத்தாவைப் பார்க்க வேண்டும். ஹௌராவில் என்ன இருக்கிறது, குப்பை மேடுகளையும் சாக்கடைகளையும் தவிர? கல்கத்தாவைப் பார்த்துவிட்டால், வங்காளத்தையே பார்த்த மாதிரி!" என்று அவர் கூறியதைக் கேட்டுக் கண் திறந்த பொழுது நான் கண்டது ஹௌரா பாலம்.

'இந்தப் பாலம் மட்டும் இல்லையேல், ஹூக்ளி என்ற பெயரில் ஓடும் கங்கையைக் கடந்து கல்கத்தாவைப் பார்க்கப் போவது எப்படி ? இது ஒன்று போதுமே, ஹௌராவின் புகழ் பாடுவதற்கு!' என்ற எண்ணம் ஒரு புறம். தென் பகுதியிலிருந்து இந்த வட கிழக்குப் பகுதிக்கு வந்தவர்கள் முதன் முதலில் இந்த ஹௌராவில்தானே குடியேறியிருக்கிறார்கள்! இங்கிருந்தவண்ணம் பணியாற்றித்தானே கல்கத்தாவைப் பெருநகரம் ஆக்கும் முயற்சியில் தங்கள் ஆற்றலையும் காட்டியிருக்கிறார்கள்!' என்ற எண்ணம் மறுபுறம். ஹௌராவை ஒரு முறை வலம் வந்தே தீருவது என்ற முடிவு கட்டிக் கொண்டேன். இங்கு கங்கையைக் கடக்கப் பாலம் மட்டும் இல்லை; படகுகளும் உண்டு என்பதை அறிந்த பொழுது எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சி ! கங்கை ஆற்றைக் குகனின் உதவியோடு ஸ்ரீராமன் ஒரு முறைதான் படகில் கடந்திருக்கிறான். நாமோ ஒரு முறைக்கு இருமுறையாகக் கடக்கப் போகிறோம் என்று மகிழ்ந்தவனுக்கு இயந்திரப் படகில் அன்றாடம் கல்கத்தாவுக்குப் பணி புரிய வருகிறவர்களைக் கண்ட பொழுது 'என்னே அவர்கள் பாக்கியம் !' என்று இழை மூச்சுவிடத் தோன்றியது. குறைந்த செலவில் கல்கத்தாவின் நிறைந்த இதயப் பகுதியை அடையக்கூடிய வாய்ப்பு காரணமாகத் தென்னிந்தியர்கள் — குறிப்பாகத் தமிழர்கள் ராமகிருஷ்ணபுரம் என்னும் பகுதியில் அதிகம் குடியேறியுள்ளார்கள். அதோடு திருவள்ளுவர் மன்றம் தென் இந்தியச் சங்கம் ஆகியவற்றை நிறுவிக் கொண்டு போட்டி போட்டுக் கொண்டு அதே நேரத்தில் ஒற்றுமையாகச் செயலாற்றி வருகிறார்கள்.



■ பேலூர் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஆலயம்.

பள்ளியும் நூலகமும் நிறுவியிருப்பதோடு, இயல், இசை, நாடகத் துறையிலும் பணியாற்றி வருகிறார்கள்.



கங்கையைக் கடந்து சைக்கிள் ரிக்ஷாவில் பயணம் செய்த பொழுது நீண்டு ஓடிய மதில் கவரைக் கண்டேன். சணல் ஆலைக்குப் பெயர் போன ஹௌரா மில்தான் எத்தனை பெரியது!

என்னை எதிர்கொண்ட நண்பர், இறங்கியதும் இறங்காததுமாக, "வாருங்கள், சிவப்பு வீட்டுக்குப் போய் வருவோம் !" என்றார்.

"என்ன, சிவப்பு வீடா ?" மென்று விழுங்கினேன்.

"ஆம். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் அந்த வீட்டுக்கு வந்து அடிக்கடி பூஜை நிகழ்த்தியுள்ளார். அதன் நினைவாக இன்றும் இங்கே ஆண்டுக்கு ஒருநாள் விசேஷ பூஜை நடைபெறுகிறது!" என்றார் அவர்.

"அப்படியா ? இந்தப் பகுதிக்கு அதனால்தான் ராமகிருஷ்ணபுரம் என்று பெயர் வந்தது போலும் !" என்று கேட்டுக் கொண்டே அவரோடு சிவப்பு வீட்டுக்குப் பயபக்தியோடு போனேன்.

மூன்றாவது மாடியின் மேற்கூரையிலே இருந்தது பூஜை அறை. "ஏன், பூஜை அறையைக் கீழேயே வைத்திருக்கக் கூடாதோ ?" என்று கேட்டேன்.

"பூஜை அறையின் தூய்மை கெடாதிருக்க, பொதுவாக வங்கத்திலேயே இந்த முறை

# நகர்வலம்







யைத்தான் கையாளுகிறார்கள் !'' என்று சுருங்கச் சொல்லி விளங்க வைத்த நண்பர். ''அடுத்தபடியாக நாம் பார்க்கப் போவது ஆயிரம் கைக் காளி கோயில்!'' என்றார்.

'ஆகா ! ஒருருவம் ஒரு நாமம் இல்லாத பரம்பொருளுக்கு ஆயிரம் உருவம் ஆயிரம் நாமம் மட்டும் இன்றி ஆயிரம் கைகளும் வைத்துப் பார்த்து இந்த மனிதன் எப்படியெல்லாம் மகிழ்கிறான்' என்று எண்ணியவாறே ரிக்ஷாவில் ஏறி... எத்தனை குறுகலான சந்துக்களில் எல்லாம் அது புகுந்து புறப்பட்டது ! போதாக்குறைக்கு இருபுறமும் நுரைத்தோடும் சாக்கடைகள் ! 'எல்லைக் காளிதான் நல்லபடியாக நம்மைச் சேர்க்க வேண்டும்' என்று வேண்டியவாறே நகரின் எல்லையிலிருந்த ஆயிரம் கைக் காளியைத் தரிசிக்கச் சென்றேன். கதை வேலையில் காட்சி தந்த காளியை ...டினாற் போலிருந்த சுவரில் ஆயிரம் கை... நீட்டிக் கொண்டிருந்தன. ஒரு சில கைகள் ஒடிந்து பழுதுபட்டுமிருந்தன.

''பொடானிகல் கார்டன் கல்கத்தாவோடு தன் பெயரை இணைத்துக் கொண்டாலும் இதே ஹௌராவின் சிப்பூர் [சிவபுரி] பகுதியில்தான் இருக்கிறது. ஏறக்குறைய முந்நூறு ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. ஒரு புறம் ஆறு. அதை ஒட்டினாற்போல் குளுகுளுத் தோப்பு. இயற்கைப் பித்தர்கள் நுழைந்துவிட்டால் இதைவிட்டு வெளியே வரத் தோன்றாது !'' என்றார் கூட வந்த நண்பர்.

ஒரு குட்டையில் என்ன, பல குட்டைகளில் தென் அமெரிக்காவிலிருந்து வந்த ராட்சஸ நீராம்பல்களைக் கண்டோம். இலையொன்று முப்பது அடிச் சுற்றளவுக்குக் குறைவில்லை என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். பெரிய பச்சைத் தாம்பாளம் போலிருந்த அதன் இலை மேல் ஐந்து வயதுக் குழந்தையை உட்கார வைத்தாலும் அது நீரில் அழுந்தாதாம்.

ஒரு விசித்திரப் பனைமரம். ஒற்றைப் பனையாக நில்லாமல் பல கிளைகளும் கொப்புகளுமாக நின்றது.

அடையாற்றுக்கு ஓர் ஆலமரம் போல் இங்கும் ஓர் ஆலமரம். 'ஆல் போலத் தழைத்து' என்னும் வழக்கை நிரூபித்துக் கொண்டு நின்றது. இதன் மூல மரம் என்றோ பட்டுப் போய் விட்டது என்றாலும், இதன் விழுதுகள் இதைத் தழைத்த ஆலாக்கிப் பூர்ண ஆயுள் வழங்கிக் கொண்டிருக்கின்றன.

- வங்கம் கொண்டாடும் நவராத்திரி — துர்க்காபூஜை.
- பொடானிகல்கார்டன்.
- தக்ஷிணேசுவரர் ஆலயம்.



எதையெதையோ திருடியதாகக் கேள்விப்பட்டிருக்கிறோம். இப்போது இசைத் திருட்டே நடத்தி அகப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இசைத்தட்டில் பதிவான பாடல்களை 'காஸெட் டேப்'பில் பதிவு செய்து விற்றிருக்கிறது ஒரு நிறுவனம். இதைக் கண்டுபிடித்து வழக்குத் தொடுத்தது இந்திய கிராமபோன் கம்பெனி. விளைவு: அபராதத்துடன் சிறைவாசமும்கூடக் கிடைத்தது, அந்நிறுவனத்தின் பாகஸ்தர்களுக்கு !

---

இப்படிப் பார்த்துக் கொண்டே சென்ற நாங்கள் திகைப்பூண்டை மிதித்தவர்கள் போலத் திரும்பத் திரும்ப ஒரே இடத்துக்கு வந்து கொண்டிருந்தோம். கால்களோ கெஞ்சின. அந்த வலியை மறக்க, ''வேடிக்கையாகப் பார்த்துப் போக வந்த நம்மையும் அல்லவா இந்தப் பூங்கா கண்களைக் கட்டிக் காட்டில் விட்டாற்போல, இயற்கைப் பித்தர்களாக்கி அலைபாய வைக்கிறது !'' என்றேன்.

'வாயில் இருக்கிறது வழி' என்று கூறிய நண்பர் எப்படியோ வெளியே அழைத்து வந்து விட்டார். ஆனால் எங்களுக்குரிய பஸ்ஸைப் பிடிக்க இரண்டே முக்கால் மைல் நடந்தது என் கால்களுக்கல்லவா தெரியும் !

அசுர சக்தியை அழிக்கவும் அறத்தை வளர்க்கவும் அன்னை பராசக்தி எடுத்த அவதாரங்களில் ஒன்றுதானே துர்க்கா-காளி அவதாரம் ! அந்தப் பணி முடிந்தும் ஆங்காரம் அடங்காமல் அவள் அடங்காப் பிடாரியாகி விட்டாள். எந்த ஆடவனைக் கண்டாலும் கிழித்து மாலையாகப் போட்டுக் கொண்டாள். ஹிரண்ய கசிபுவைச் சங்காரம் செய்யத் தோன்றிய செங்கட் சீயத்தின் கதைதான். அந்த நரசிங்கத்தை அடக்கச் சிவபெருமானே சரப உருவம் எடுத்து வந்ததாகத் திருபுவன மாகாத்மியம் கூறும்.

அவளுடைய அந்தப் பயங்கரத்தைக் கண்ட சிவபெருமானுக்கே கை ஓடவில்லை ; கால் ஓடவில்லை. அந்தக் குரூரத்தைக் காணச் சகியாமல், தன்னையும் கிழித்து மாலையாகப் போட்டுக் கொள்ளட்டும் என்று அவள் கால்களில் விழுந்து விட்டார். எடுக்கக் குனிந்தவளுக்குத் தன் கணவனையே காலடியில் கண்டதும் துணுக்கென்றது. தலையைச் சிலிர்த்துக் கொண்டு சுய உணர்வு பெற்றாள். 'என்ன காரியம் செய்ய இருந்தோம்?' என்று எண்ணிப் பார்த்தவள் வெட்கித் தலை குனிந்தாள். திரிபுரம் எரித்த சிவபெருமான் அப்பொழுது சிரித்த சிரிப்பு சிவச் சிரிப்பு ! அடுத்த கணம் காளி சிவ — சக்தியாக மாறினாள். அத்தகைய சிலா வடிவத்தைக் காண வேண்டும் என்றால், தட்சிணேசுவரர் ஆலயத்துக்குச் செல்ல வேண்டும். இந்தக் கோவிலில் பன்னிரண்டு சிவலிங்கங்கள் இருக்கின்றன. ராணி ரஸமணி பத்தொன்பதாம் நூற்றாண்டின் மத்தியில் கட்டிய கோவில் ஆகும். ஸ்ரீ ராதாகிருஷ்ணன் கோவிலையும் தன்னுள் கொண்ட இந்தக் கோவில் கங்கையின் கீழ்க்கரையில் உள்ளது.

இந்தச் சிவ — சக்தியைத் தரிசித்து அவன் அருள் பெற ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் மேல் கரையிலிருந்து கீழ்கரைக்கு எத்தனை உடன் நீச்சலும் எதிர்நீச்சலும் போட்டிருப்பார் ! எந்தப் பொருளையும் சிவ சக்தி சொரூபமாகக் காண முயன்ற அவர் கரம் பிடித்த மனைவியையும் அல்லவா அன்னையின் வடிவமாக, சிவசக்தி சொரூபமாகக் காணும் மனப் பக்குவத்தைப் பெற்றுவிட்டார் !

அகக் கல்வியினால் விவேகாநந்தரைக் கவர்ந்த பரமஹம்ஸருக்கு விவேகாநந்தர் எடுத்த கோயில், கங்கையின் எதிர் கரையில் ஒரு கோணத்தில் நின்று தட்சிணேசுவரத்தையும் பேலூரையும் ஏககாலத்தில் தரிசிக்கும் வாய்ப்பை நல்குகிறது. விவேகானந்தர் உலகத்துக்கு ஹிந்து மதத்தின் பெருமையைப் போதித்தார் என்றாலும், அவர் எடுத்த ஆலயம் எம் மதத்தையும் தம் மதமாக ஏற்று ஒரு கோணத்தில் பார்த்தால் ஹிந்து கலாசாரத்தையும் வேறு கோணத்தில் பார்த்தால் இஸ்லாமிய - கிறிஸ்துவப் பண்பாட்டினையும் போற்றுவதாக அமைந்துள்ளது. தென்னிந்திய பாணியிலே விநாயகர் ஆஞ்சநேயர் ஆகியோரும் இங்கு காட்சி தருகின்றனர்.

இங்கே ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், விவேகாநந்தர் ஆகியவர்களது படுக்கைஅறை, அன்னை சாரதாமணி தங்கிய இடம் எல்லாவற்றையும் போற்றிப் பாதுகாக்கிறார்கள். அவர்கள் பயன்படுத்திய கட்டில்கள் முதற்கொண்டு காட்சிப் பொருள்களாக வைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றைத் தரிசிப்பவர்கள் மௌனம் ஒரு தெய்வ்மொழி என்பதை அநுபவபூர்வமாக உணரும் சூழ்நிலை உருவாக்கப்பட்டிருப்பதைக் காண்பார்கள். அதோடு பழமையில் புதுமையைப் புகுத்தி விருப்பத்தையும் பார்ப்பார்கள்.

காசிக்குப்போகிறவர்கள் கங்கை கொண்டு வராமல் இருப்பார்களா ? அதே போலக் கல்கத்தா போகிறவர்கள் சாந்திநிகேதனத்தைக் காணாமல் திரும்புவார்களா ? சாந்திநிகேதனம் என்று சொல்வதற்கு முன்னால், நம் கண் முன்னே நிற்பவர் கவீந்திரர் ரவீந்திரர். வீரபூம் மாவட்டத்தில் கவீந்திரரின் தந்தை மகரிஷி தேவேந்திரநாத் டாகுர் நிறுவிய ஆசிரமமே ஆலாகத் தழைத்துச் சாந்திநிகேதனமாகத் திகழ்கிறது.

இந்தச் சாந்திநிகேதனுக்குப் போக வேண்டும் என்றால், ஹௌராவில்தான் போல்புருக்கு ரயில் ஏற வேண்டும். நாலு — நாலரை மணி ஓட்டம்.

செல்வத்தில் திளைத்தாலும் வளமான கற்பனையில் ஊறிய மகா கவி ரவீந்திரநாத் டாகுர் தந்தை நிறுவிய ஆசிரமத்துக்குப் பிரம்மச்சரிய ஆசிரமம் என்று பெயர் சூட்டி ஐந்து மாணவர்களைக் கொண்டு கல்விக் கூடமாகத் தொடங்கினார். அறைக்குள் அடைபட்டிருந்த கல்வியை இயற்கைச் சூழலில் விளையாட விட்டு நிழல் தரும் தருக்களுக்கு அடியில் குளுமையாகப் புகட்டிச் சுதந்திரக் காற்றைச் சுவாசிக்கச் செய்தார். அவர் உரமூட்டி, வளம் கூட்டிய கல்வி யகம் விசுவ பாரதியாகப் பேருருவெடுத்து உலகத்தின் கவனத்தையே ஈர்த்தது. இங்கே சம்ஸ்கிருதம், சீனம், ஹிந்தி ஆகிய மொழிகளும், இசை, நடனம், ஓவியம், சிற்பம்

போன்ற கலைகளும் உயர்தரக் கல்வியாகப் புகட்டப்படுகின்றன.

பண்டைக் கால வாழ்வைக் கண் முன் கொண்டு நிறுத்துவது போல் இங்குள்ள பகுதிகளுக்கும் கட்டடங்களுக்கும் சூட்டப்பட்டிருக்கும் பெயர்களே வெகு நேர்த்தியானவை. கவியரசர் வாழ்ந்த 'உத்தராயண'ப் பகுதியில் தான் எத்தனை கட்டடங்கள்! உதயண், கோணார்க், சியாமளி, புனஸ்ச, உதிசி என்று பெயர் கொண்ட இவை ரவீந்திரரின் மகன் ரதீந்திரரின் கற்பனை வளத்துக்கும் கைவண்ணத்துக்கும் சான்று பகருபவை. விசித்ரா என்னும் பெயரில் ரவீந்திர பவனம் ஆய்வுக் கூடமாகவும் காட்சிச் சாலையாகவும் துலங்குகிறது. உள்ளே சென்று ஒரு சில மணி நேரங்களைச் செலவிட்டால், புகைப்படங்களிலேயே ரவீந்திரரின் வாழ்க்கையை முழுமையாகப் படித்து விடலாம்.

இங்கே பல தமிழர்கள் புகழோடு பயின்றதுமின்றிப் புகழ் சிறக்கப் பணியும் புரிந்துள்ளார்கள். இங்குள்ள நூலகத்துக்குத் தமிழ் நூல்கள் வழங்க ரசிகமணி டி. கே. சி.யும் பேராசிரியர் கல்கியும் விஜயம் செய்துள்ளார்கள். ராஜா சரின் பொருளுதவியால் நல்ல பல தமிழ் நூல்கள் இந்த நூலகத்துக்கு அணி செய்கின்றன.

தமிழ் வளர்த்த வைணவத்தையும் திவ்யப் பிரபந்தங்களையும் ஹிந்தியில் மொழி பெயர்த்து வெளியிடும் பணியை இங்குள்ள ஹிந்தி பவனம் ஏற்றிருக்கிறது. அப்பணியை நிறைவேற்றும் பொறுப்பை ஏற்றிருப்பவர் ஸ்ரீ ஸ்ரீநிவாசராகவன் என்னும் புலமை மிக்க பெரியவர். ஓய்வுற்று வாழ வேண்டிய வயதில் ஓய்வுறாப் பணியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டிருக்கிறார்.

பள்ளி என்னும் தமிழ்ச் சொல், வங்க மொழியிலும் அதே பொருளில் வழங்கி வருகிறது என்பதற்குச் சான்று ஆண்ட்ரூஸ் பள்ளி என்னும் குடியிருப்பு. இது தீனபந்து ஆண்ட்ரூஸின் நினைவைப் போற்றுவது.

பள்ளி ஸங்கடன விபாக், பள்ளி சிக்ஷா ஸதன என்பவை அறிவு புகட்டும் கூடங்கள். கிராம வளர்ச்சித் திட்டங்களைச் செயலாக்குவதற்காக ஸ்ரீ டாகுர் நிறுவிய ஸ்ரீ நிகேதனம் தான் இந்தக் கல்விக் கூடங்களை நடத்தி வருகிறது. இவற்றில் கைத்தொழில்களும் விவசாயமும் சொல்லித் தரப்படுகின்றன. கல்வி பயிலும்போதே சம்பாத்தியம் என்ற குறிக்கோளையும் நிறைவேற்றுகின்றன. ஸ்ரீ நிகேதனத்தின் 'பாதிக்' என்னும் அச்சுப் பூ வேலை பிரசித்தமானது. நாட்டுப்புறத்துப் பெண்மணிகள் இதனால் பெரிதும் பயனுறுகிறார்கள். இத்துறையில் உற்சாகமாய்ப் பணி புரிபவர் தமிழ் அன்பர் ஸ்ரீ ஸ்ரீநிவாசன்.

நந்தலால்போஸ் போன்ற ஓவியர்களும் ராம் கிங்கர் போன்ற சிற்பிகளும் சாந்தி நிகேதனுக்குப் புகழ் தேடித் தந்தவர்களில் ஒருசிலர். ஆனால் அவர்களுடைய கலைச் செல்வங்கள் இப்பொழுது அவ்வளவாகப் பேணிப் பாது காக்கப்படவில்லை என்பது வருந்தத் தக்க விஷயம். இங்கு முப்பது ஆண்டுகளுக்கு மேலாகப் பணி புரிந்து விட்டு ஓய்வு பெற்றுள்ளவர்களில் பெருமாள் என்னும் தமிழரும் ஒருவர்.



"ஒரு கப் காப்பி சாப்பிடணும். ஐம்பதாயிரம் ரூபாய் தாங்க அப்பா!"

"என்னடா உளறுகிறாய்?"

"உளறல் இல்லேப்பா. ஒரு கார் வாங்கி டிரைவ்-இன் - ஹோட்டல்லே போய்ச் சாப்பிடணும். அதுக்காகத்தான்."

-சரஸ்வதி பஞ்சு



■ ஓர் இலக்கிய விமர்சகர் உங்கள் படைப்பைப் பாராட்டினால் ரொம்பவும் மகிழ்ச்சி அடைந்துவிடாதீர்கள். ஏனென்றால் அது தூக்கிலிடுபவன், குற்றவாளியைப் பார்த்து, "உன் கழுத்து எவ்வளவு அழகாக அமைந்திருக்கிறது!" என்று பாராட்டுவதற்கு ஒப்பானது.

— கோ. நீபா

---

கவிஞரின் கற்பனையில் உதித்த சாந்தி நிகேதனம் உலகத்தையே கவர்ந்ததில் வியப்பில்லை. அவரது கற்பனைக்கும் மேலாகக் கற்பனை செய்து பல கோட்டைகள் கட்டிக் கொண்டு போன எனக்கு என் கற்பனைதான் கைகொடுத்து உதவவில்லை. கவிஞர் கண்ட கனவு அவர் காலத்துக்குப் பின் அவ்வளவாக நிறைவேறவில்லையோ என்ற பிரமை தட்டியது. அந்தப் பிரமைக்குக் காரணம் எனக்கு ஏற்பட்ட பசியாகவும் இருக்கலாம் அல்லவா? ஹோட்டலைத் தேடி மூன்று மைல் போல்புருக்கு ஓடினேன். இருப்பதற்குள் உயர்ந்த ஹோட்டல் என்று சொல்லப்பட்டதில் நுழைந்தேன். வெஜிடேரியன், நான்-வெஜிடேரியன் இரண்டும் இணைந்த ஹோட்டல் அது. சாதம், பருப்பு, சப்ஜி, (கறி) ஒரு துண்டு எலுமிச்சம் பழம் ஆகியவற்றைக் கொண்டு வந்து வைத்தார்கள். பழக்கமில்லாத தோஷம் கடுகெண்ணெயின் வாசனை குமட்டிக் கொண்டு வந்தது. பருப்பும் கறியும் வாயில் வைக்க வழங்கவில்லை. 'சரி, ஒரு கப் மோரோ, தயிரோ வாங்கிச் சமாளித்து விடுவோம்' என்று எண்ணிக் கேட்டேன். கையை விரித்து விட்டார்கள். வங்காளிகளின் சாப்பாட்டில் மோருக்கும் தயிருக்கும் இடம் இல்லாததே காரணம். வெறும் எலுமிச்சம் பழத்தை முகர்ந்து பார்த்து விட்டு, ஐந்து மணி சுமாருக்கு போல்புரில் ரயில் ஏறினேன். இருட்டிய பின்னும் வழி நெடுகக் கிராமங்களுக்குப் பதிலாகக் கும்மிருட்டைத்தான் கண்டேன். மின்மினிப் பூச்சியளவுகூட வெளிச்சத்தைக் கண்டேனில்லை.

'கல்கத்தாவைப் பார்த்து விட்டால் வங்காளத்தையே பார்த்த மாதிரி' என்று மார்வாரி அன்பர் சொன்னாரே, அதற்குப்பொருள் 'கல்கத்தாவைத் தவிர மற்றக் கிராமப் பகுதிகள் அவ்வளவாக வளரவில்லை' என்பதுதானோ?

ஹௌராவை அடைந்து நான் தங்கியிருந்த ஹோட்டலுக்குப் பசியோடு போய்ச் சேர்ந்த பொழுது பாத்திரங்களைக் கழுவிக் கவிழ்த்துக் கொண்டிருந்தார்கள்!

# லக்மே லவெண்டர் டால்க்

## கொஞ்சி மணக்கும்...
## பிரெஞ்சு மயக்கம்.

தரித்துக் கொள்வீர்
லக்மே லவெண்டர் டால்க்.
பூத்த புது பிரெஞ்சு
லவெண்டர் பூக்களின்
நேர்த்தியான மணம்.
லக்மே லவெண்டர் டால்க்

**உங்கள் எழில்:**
**எங்கள் தொழில்.**




லக்மே

SCA/L-VC-LT/11 TAM.

# ஷோல்யெனிட்சன்

உலகம் முழுவதும் கம்யூனிஸத்தின் ஆதிக்கம் படிப்படியாக விரிவடைந்து கொண்டு வரும் நாளில் கம்யூனிஸத்தின் சாதனைகளையும் வேதனைகளையும் அறிந்து கொள்ள வேண்டியது சிந்திக்கத் தெரிந்த ஒவ்வொரு மனிதனுக்கும் கடமையாகிறது.

கம்யூனிஸத்தின் தாய் நாடான ருஷ்யாவில் சந்திரனை எட்டும் விஞ்ஞான ஆற்றலுக்கோ அல்லது அணு குண்டை வெடிக்கும் ராணுவ பலத்துக்கோ குறைவில்லை. உலகம் வியக்க உற்பத்தி பெருகுகிறது. மேற்கத்திய நாடுகள்கூட நாணும் அளவில் மக்களின் நல்வாழ்வு மலர்கிறது. ஏழைமை இருக்குமிடம் தெரியவில்லை. கலைகள் திரும்பின பக்கமெல்லாம் கண்ணையும் கருத்தையும் ஈர்க்கின்றன.

ருஷ்ய மக்கள் அசாதாரண வீரர்கள். ஹிட்லரை எதிர்த்து நின்று தாய் நாட்டைக் காத்தார்கள்; படையெடுத்துப் போய் பெர்லினைப் பிடித்தார்கள். சலியாத உழைப்பாளிகள். யுத்தத்தில் தரைமட்டமான நகரங்களை இந்திர ஜாலமோ என்று எண்ணுமாறு புதுப்பித்தார்கள். அறிவாளிகள். ருஷ்ய விஞ்ஞானிகளையும் சிந்தனையாளர்களையும் பட்டியல் போட்டு மாளாது. ஆற்றல் மிக்கவர்கள். இல்லாமலா வல்லரசாகத் திகழ்கிறது ருஷ்யா?

ருஷ்ய மக்களிடம் நிலவும் நல்லொழுக்கம், பெருகியுள்ள வாழ்க்கை வசதிகள், விண்ணை முட்டும் மாளிகைகள், பாதாளத்தில் ஓடும் ரயில்கள் எல்லாவற்றையும் பற்றி ருஷ்யாவுக்குச் சென்று வராதவர்களுக்குக்கூடத் தெரியும்.

அங்கே இல்லாத ஒன்றைப் பற்றியும் தெரியும். இத்தனை இருந்தும் 'அது' இல்லாததால் வேதனை மிஞ்சுவது தெரியும்.

அந்த 'அது': பூரண சுதந்திரம்.

இதைத்தான் ஷோல்யெனிட்சனின் வாழ்க்கை நமக்கு எடுத்துக்காட்டுகிறது.

அவர் கம்யூனிஸத்துக்கு எதிராகப் போர்க் கொடி உயர்த்துபவர் அல்ல; அரசியல்வாதியல்ல, தளபதியும் அல்ல. அவர் ஒரு கலைஞர். சத்தியத்தை நாடும் உண்மைக் கலைஞர். அவர் உள்ளம் மீண்டும் மீண்டும் சத்தியத்தை நாடியே சென்ற போது அவருக்குக் கிடைத்த வெகுமதி: தேசப் பிரஷ்டம்!

வாழ்க்கையில் பல அல்லல்களுக்கு ஆட்பட்டுக் கம்யூனிஸத்தின் உண்மை சொரூபங்களை நேரடி அனுபவத்தில் அறிந்து கொண்ட ஷோல்யெனிட்சன் கூறுகிறார்:

"கம்யூனிஸத்தின் கீழ் உழைப்பாளிகள் தங்கள் உரிமைகளுக்காக உறுதியுடன் நிற்க முடியாது. மேற்கத்திய நாடுகளைப் போலன்றி அவர்களுக்குக் கொடுக்கப்படுவதைப் பெற்றுத் திருப்தி அடைய வேண்டியதுதான்."

"ஏராளமான மக்களைக் கைது செய்து நீதி விசாரணையின்றி அடைத்து வைப்பதும் அழிப்பதும் ஹிட்லர் காலத்தில் தோன்றியது அல்ல; சோவியத் புரட்சி காலத்திலேயே ஆரம்பித்து ஸ்டாலின் காலம் வரை நீடித்தது."

"குடும்பத்தைச் சேர்ந்த ஒருவரைக் கொன்று அல்லது சிறைப்படுத்தி, அதன் மூலம் குடும்பத்தில் உள்ள மற்றவர்களுக்கு ஆட்சியிடம் பயத்தை உண்டு பண்ணும் பழக்கம் இன்றைக்கும் நிலவுகிறது."

"எதிர்க் கட்சிகள் பெயரளவுக்குக் கூடக் கிடையாது; நாற்பதாண்டுகளாக அங்கே தேர்தல் என்பது கேலிக்கூத்து தான்; சட்டசபை அமைப்புக்கள் இல்லை; சுதந்திரமான பத்திரிகைகள் இல்லை; சுதந்திரமான நீதிபதிகள் கிடையாது; அரசின் உள்நாட்டு, அயல்நாட்டுக் கொள்கைகள் மீது மக்கள் ஆதிக்கம் செலுத்த முடியாது; ஆட்சியின் சிந்தனைக்கு ஒத்துப் போகாதவர்கள் அழிக்கப்படுவார்கள் அல்லது மன நோய் மருத்துவமனைக்கு அனுப்பப்படுவார்கள்; அப்படி இன்றளவுக்கும் ஏழாயிரம் பேர் வரை கட்டாய மன நோய் சிகிச்சை பெற்று வருகிறார்கள்."

"'மன்னர் ஆட்சி, செல்வந்தர் ஆட்சி இவற்றைவிட ஜனநாயகம்

கல்கி மலர் 36 இதழ் 6



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

ஆபத்தானது. அங்கவ ர்குரியது' என்பது மார்க்ஸின் சித்தாந்தங்களுள் ஒன்று.''

''செக்கோஸ்லாவாகியா, ஹங்கேரி போன்ற நாடுகளில் சுதந்திர ஆர்வங்களை ருஷ்யா டாங்குகளை அனுப்பி நசுக்கி விட்டது.''

''ஸ்டாலினிஸம்தான் மோசம் என்றும் அந்த நிலைக்கு ருஷ்யா திரும்பாமல் இருந்தால் சரி என்றும் யாரும் சமாதானம் அடைவதற் கில்லை. ஸ்டாலினிஸம் என்பதாக ஒன்று கிடையாது. கம்யூனிஸத்தின் குறைபாடு களுக்கு ஸ்டாலினிஸம் என்பது ஒரு மாற்றுப் பெயர், அவ்வளவே.''

''கம்யூனிஸம் சந்தர்ப்பத்துக்கு ஏற்பப் பல உருவங்களை எடுக்கும்; மாறு வேஷங்களைத் தரிக்கும். ஏமாந்துவிடக் கூடாது.''

''பீகிங்குக்கும், மாஸ்கோவுக்கும், ஹனாய்க்கும் இடையே சிண்டு முடிந்துவிட் டால் போதும். அப்புறம் சுதந்திர ஜனநாயக நாடுகள் கவலையற்றிருக்கலாம் என்று எண்ணு வது பேதைமை. தங்களுக்குள் நூறு வித்தி யாசங்கள் இருப்பினும் ஜனநாயக உணர்வு களை எதிர்ப்பது என்று வரும்போது கம்யூனிஸ நாடுகளிடையே வேற்றுமையில்லை.''

இவற்றைவிடக் கசப்பான, பயங்கரமான உண்மைகளைக் கூறுகிறார் ஷோல்ஜெனிட்சன்.

ஒரு நாட்டின் மக்கள் அஜாக்கிரதையால் சுதந்திர ஜனநாயக வாழ்வைப் பறிகொடுத்து விட்டார்களேயானால் அவர்களுக்கு என்ன நேரும் என்பதை ஷோல்ஜெனிட்சன் விவரிக் கும் உண்மைகள் உணர்த்துகின்றன.

அதே சமயம், சுதந்திர ஜனநாயக முறை முதலாளித்துவக் கொடுங்கோன்மையாக மாறினால் மக்கள் தங்களையும் அறியாமல் கம்யூனிஸ வலையில் விழுந்து விடுவார்கள் என்றும் எச்சரிக்கின்றன.

சுதந்திர வாழ்வு நமக்கு இருக்கிறதே என்று திருப்தி அடைந்தால் போதாது. உலகம் முழுவதும் மக்கள் பூரண சுதந்திரத் தின் மதிப்பை அறியும்படி செய்ய வேண்டும். அதுதான் கம்யூனிஸ விஸ்தரிப்புக்கு அணை போடும்.

''கம்யூனிஸ நாட்டிலும் சுதந்திரம் உண்டு; அது பொறுப்பு உணர்ச்சியுடன் செயல்பட வேண்டும் என்று அரசு கவனித்துக் கொள்கிறது, அவ்வளவுதான்'' என்று சொல் வார்கள் சிலர். பொறுப்புணர்ச்சியை நிர்ண யிப்பது அவரவர் மனச்சாட்சியாக இருக்க வேண்டும். 'இப்படி எழுதுவதும் பேசுவதும் தான் பொறுப்புணர்ச்சி' என்று அரசு நிர் மானிக்கும்போது சிலவற்றை மட்டுமே கூற சுதந்திரம் இருக்கும். அது சுதந்திரமல்ல; அடிமைத்தனத்தினூடே யாசித்துப் பெறுகிற சிறிதளவுச் சலுகை!

அப்படிப் பிச்சை எடுக்க விரும்பாதவர் ஷோல்ஜெனிட்சன்.

# டாக்டர் எம். எல். வி.

**டை**கர் வரதாச்சாரியார் கலா க்ஷேத்திரத்துக்கு வந்து சேர்ந்த ஆரம்ப நாட்கள். சங்கீதத்தில் டிப்ளொமா, டிகிரி வகுப்புகள் ஆரம்பிப்பது பற்றி ஸ்ரீமதி ருக்மிணிதேவி யுடன் பேசினார். ''இவ்வளவு பேசுகிறீர்களே நீங்கள் என்ன டிப்ளொமா அல் லது பட்டம் பெற்றிருக்கி றீர்கள்?'' என்று கேட்டார் ருக் மிணிதேவி.



''நான் டிப்ளொமாவும் டிகிரியும் வாங்கிக் கொள்கிறவன் இல்லை அம்மா; கொடுப்ப வன்!'' என்றார் டைகர். அவர் குரலில் தொனித்த தன்னம்பிக்கையும் உறுதியும் கண்டு மலைத்துப் போனார் ருக்மிணிதேவி.

ஸ்ரீமதி எம். எல். வசந்தகுமாரிக்கு மைசூர் சர்வகலாசாலை டாக்டர் பட்டம் வழங்கி யதை முன்னிட்டு அவரைப் பாராட்ட கிருஷ்ணகான சபை ஒரு நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருந்தது. அதில் ஸ்ரீமதி எம்.எல்.வியை வாழ்த்திப் பேசிய ஸ்ரீமதி ருக்மிணி தேவி மேற்படி நிகழ்ச்சியை நினைவுகூர்ந்தார்.

மைசூர் பல்கலைக் கழகம் தாமும் தமது தாய் தந்தையரும் புரந்தரதாஸர் கீர்த்தனை களைப் பிராபல்யப்படுத்த எடுத்துக் கொண்ட முயற்சிகளுக்காகவே இந்தப் பட்டத்தை வழங்கியிருப்பதாகத் தெரிவித்து அழகிய முறையில் அனைவருக்கும் நன்றி கூறினார் ஸ்ரீமதி எம். எல். வி.

அவர் வெகுசீக்கிரம் அமெரிக்கா செல்ல விருப்பதாக அறிகிறோம். கர்நாடக இசையின் எல்லாச் சிறப்பு அம்சங்களையும் அமெரிக்கா வாழ் இந்தியர்களும் அமெரிக்க மக்களும் உணரும்படி சிறப்புப் பணியாற்றித் திரும்ப வாழ்த்துகிறோம்.

---

ராஜாஜி சிந்தனை **வாழ்க்கைப் பயணத்துக்கு வழிகாட்டி**

கீதை ஒரு பாட புத்தகம் போல் படித்து ஆராய வேண்டிய நூல் அல்ல. அது மனிதர்கள் தங்கள் நடவடிக்கைகளையும் மனங்களையும் எப்படி ஒழுங்குபடுத்திக் கொள்ள வேண்டும் என்று சொல்கிறது. அது ரயில்வே கால அட்டவணைப் புத்தகம் போன்றது. வாழ்க்கைப் பயணத்துக்கு வழிகாட்டும் நூல். அதன் உதவியுடன் நாம் பயணப்பட வேண்டும். அதை உருப் போடுவதால் பயனில்லை. வெறுமனே அதை உருப் போடுவது நமது வாழ்க்கையின் லட்சியத்தை அடைய உதவாது.

— ராஜாஜி நினைவு மலர்







தமிழ் நாட்டில் நூறு 'இட்லி-தோசை' ஓட்டல்களை அரசு நடத்தப் போகிறதாம்!
— செய்தி



# ஜீவகாருண்யம்

## ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்





காரி, பாரி, ஓரி என்றெல்லாம் ஏழு பேரைக் கடை எழு வள்ளல் என்பார்கள். பாரி வள்ளல் முல்லைக் கொடி படரு வதற்காகத் தன் தேரையே கொடுத்த கதை எல்லோருக்கும் தெரியும். இன்னொருத்தன் (பேகன்) மயில் குளிரில் நடுங்குகிறதே என்று தன் உத்தரீயத்தையே எடுத்து அதற்குப் போர்த்தினான். அதிகமானுக்கு சிரஞ்சீவித்வத்தைத் தரக்கூடிய நெல்லிக் கனி கிடைத்தது. சிரஞ்சீவியாக இருந்து என்ன சாதிக்கப் போகிறோம்? அவ்வைப் பாட்டி இருக்கிறாளே, ஸதாவும் லோக க்ஷேமத்தைப் பண்ணிக் கொண்டு ஊர் ஊராக ஓடிக் குழந்தைகளுக்கு உபதேசம் செய்து வருகிறாளே, அவள் திடகாத்திரத்தோடு எத்தனை ஆயுசு இருந்தாலும் அதுதான் லோகத்துக்கு நல்லது என்று அவன் நினைத்து, அவளுக்கே அந்த நெல்லிக் கனியைத் தானம் பண்ணி விட்டான்.

'இது புத்திசாலித்தனமாக இருக்கிறது; ஆனால் முல்லைக்குத் தேரைத் தரவாவது? மயிலுக்கு எங்கேயாவது குளிருமா? அதற்குப் பட்டுப் பீதாம்பரத்தைப் போர்த்தவாவது? இதெல்லாம் புத்தி இல்லாத காரியமாக அல்லவா இருக்கிறது?' என்று கேட்கலாம். என்னைக் கேட்டால் இப்படிப் புத்திக்கு வேலையே இல்லாமல் முட்டாள்தனம் மாதிரிக் கூடத் தோன்றுகிற காரியங்கள்தான் நிஜமான அன்பை, நிஜமான தியாகத்தைக் காட்டுகின்றன. அன்பு பீறிக்கொண்டு வருகிற போது மூளையினால் அதற்கு நியாயாநியாயங்கள் பார்க்க முடியாது. இப்படித்தான், நாயன்மார்களைப் பார்த்தால், பெண்டாட்டியையே ஒருத்தர் தானம் பண்ணினார், இன்னொருத்தர் பிள்ளையையே கறி பண்ணிப் போட்டார் என்கிறபோது இதெல்லாம் மூடத்தனம், உணர்ச்சிக் கட்டுப்பாடில்லாத காரியம் என்று சொல்லக் கூடாது. அவர்களுக்கு எப்படிப்பட்ட தியாக சிந்தனை இருந்தது என்பதுதான் முக்கியம். மூளையால் சமாதானம் சொல்ல வேண்டும் என்ற எண்ணமே இல்லாமல் உருட்டிப் புரட்டிக் கொண்டு வந்து விட்ட தியாகம் தான் நிஜமான தியாகம் என்று என் அபிப்ராயம்.

இம்மாதிரி ஆவேசமாகப் பரோபகாரம் பண்ணின பெரியவர்கள் நம் தேசத்தில் ஆதிகாலத்திலிருந்து அவிச்சின்னமாக (தொடர் முறியாமல்) வந்து கொண்டேயிருந்திருக்கிறார்கள்.

வைதிக தர்மத்துக்கு ஸாரமாக இருப்பது பஞ்ச மகா யக்ஞங்கள் என்ற ஐந்து வேள்விகள். இவற்றில் 'பிரம்ம யக்ஞம்' என்பது வேதம் ஓதுதல், ஓதுவித்தல். இதுவே நிஜமான வித்யா தானமாகிய பெரிய பரோபகாரம். 'பித்ரு யக்ஞம்' என்பது முன்னமே சொன்னாற்போல் மூதாதைகளுக்குச் செய்யும் தர்ப்பணம். 'தேவ யக்ஞம்' என்பது ஈசுவர ஆராதனம். இது ஒன்றுக்காகத்தான் மற்ற எல்லா தான தர்மங்களும். 'பூத யக்ஞம்' என்பது நாயும், காக்கையும் உள்பட எல்லா ஜீவராசிகளுக்கும் பலி போடுவது. 'ந்ரு யக்ஞம்' என்பது அதிதியை உபசாரம் பண்ணுவது. பஞ்சமகா யக்ஞங்களைப் பார்த்தால் நம் வேதமதத்தைப் போல் பரோபகாரத்தைக் காரியத்தில் கட்டாயமாக விதித்திருக்கிற தர்மம் வேறு இல்லை என்றே தோன்றுகிறது. சிருஷ்டியில் ஒரு பிரிவைக்கூட விடாமல் உபகாரம் பண்ணிவைப்பது பஞ்ச மகா யக்ஞம்.

இது தவிர 'பூர்த்தம்' என்ற பெயரில் சோஷல் ஸர்வீஸைப் பற்றி தர்ம சாஸ்திரங்களில் நிறையச் சொல்லியிருக்கிறது.

**பூர்த்தம் காதாதி கர்மயத்**

என்று ஸம்ஸ்கிருத டிக்ஷனரியான அமரத்தில் சொல்லியிருக்கிறது. 'காதம்' முதலான கர்மாக்கள் பூர்த்தம் ஆகும் என்று அர்த்தம்.

காதம் என்றால் வெட்டுவது; அதாவது குளமோ, கிணறோ, வாய்க்காலோ வெட்டி உபகாரம் பண்ணுவது. சாஸ்திரங்களில் விசேஷித்துச் சொல்லியிருக்கும். இந்த பூர்த்த தர்மத்தை மறந்ததால்தான் ஜலக் கஷ்டம் (water scarcity) என்று ஓயாமல் அவஸ்தைப்படுகிறோம். அந்தக் காலத்தில் இந்தக் காரியம் ரொம்ப முக்கியமாக இருந்ததால்தான் நாம் கூப்பிட்டு ஒருத்தன் வரவில்லை என்றால், "அவன் அங்கே என்ன வெட்டிக் கொண்டிருக்கிறானோ?" என்று கேட்கிற வழக்கம் வந்திருக்கிறது. அதாவது அவன் வெட்டிக் கொண்டிருந்தால் மட்டும் நாம் எத்தனை அவசரத்தில் கூப்பிட்டாலும் வராமலிருக்கலாம் என்று அர்த்தமாகிறது!

இப்போது வெட்டுகிற காரியம் போய், பள்ளமாக இருப்பதைத் தூர்ப்பதுதான் முக்

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**




அமெரிக்காவின் பிரபல விஞ்ஞானி ஜோனஸ் எட்வர்ட் சால்க் இளம்பிள்ளை வாதத்துக்குத் தடுப்பு மருந்து கண்டுபிடித்த சிறப்புக்காக இவ்வாண்டு நேரு பரிசு பெற்றிருக்கிறார். இதற்குமுன் அமெரிக்காவில் மார்ட்டின் லூதர் கிங் இந்த நேரு பரிசு பெற்றது நினைவிருக்கும்.

1942ம் வருஷம் தொத்துநோய் வியாதிகளைத் தேசிய ஆராய்ச்சி கௌன்ஸிலில் ஆராய்ச்சி செய்தபோது 'இன்புளுயன்ஸா' வியாதி பற்றி அறிவதில் கவனம் செலுத்தினார். இன்புளுயன்ஸா வியாதியைத் தடுக்கும் மருந்தைக் கண்டுபிடித்ததோடு 'போலியோ மைலிட்டிஸ்' வியாதியை ஒழிக்க முயற்சி எடுத்துக் கொண்டு மாபெரும் வெற்றி கண்டார்.

ஒரு நாளைக்கு டாக்டர் சால்க் பதினாறு மணி நேரம் விஞ்ஞான ஆராய்ச்சிப் பணியில் ஈடுபட்டிருப்பார். வாரத்தில் ஆறு நாட்கள் இப்படி. டாக்டர் ஸால்க் கருமமே கண்ணாக இருப்பார். ஒரு முறை ஸால்க் தம்பதியைப் பத்திரிகை நிருபர் பேட்டி காண வந்தபோது, ஸ்ரீமதி டோன்னா ஸால்க் குடும்ப விவகாரங்களைப் பற்றி விவரமாகச் சொல்லிக் கொண்டு வந்தார். டாக்டர் ஸால்க் அதைப் பொருட்படுத்தாமல் ஆய்வுக்கூடத்தையே உற்று நோக்கிக் கொண்டிருப்பது ஸ்ரீமதி ஸால்க்குக்குப் புரிந்துவிட்டது. ''ஜோனஸ்! நான் சொல்வதை நீங்கள் கொஞ்சம்கூடக் கவனிப்பதாகத்தெரியவில்லையே!'' என்று இரைந்தாள்.

டாக்டர் ஸால்க் உடனே பதில் அளித்தார்: ''நீ கவலைப்படாதே, கண்ணே! என் பக்தி சிரத்தையான பார்வை ஆராய்ச்சிக் கூடத்தை நோக்கித் திரும்பியிருந்தாலும் பக்தி சிரத்தையற்ற கவனமெல்லாம் நீ சொல்வதில்தான் இருக்கிறது!'' - பி. எஸ். எம்.

---

யமான காரியமாக இருக்கிறது. குழாயில் தண்ணீர் நின்று விட்டாலோ அல்லது பூச்சியும் புழுவுமாகக் குழாய் ஜலம் வரும்போதோ ''ஏண்டா குளத்தைத் தூர்த்தோம், கிணற்றை மூடினோம்?'' என்று துக்கமாக வருகிறது.

முன்பெல்லாம் ஒரு குளம் என்றால் வாய்க்கால்கள், வடிகால்கள் என்றெல்லாம் போட்டு வெகு சுத்தமாக வைத்துக் கொள்வார்கள். கிணறு என்றால் இழுக்கத் தெரிந்த மனுஷ்யனுக்கு மட்டும்தான் அது பிரயோஜனமாகும். குளமானாலோ வாயில்லாப் பிராணிகளுக்கும் — காக்காய், குருவி முதற்கொண்டு சகல ஜீவராசிகளுக்கும் அது - பயன்படும்.

பாதை போடுவது ஒரு தர்மம். விருக்ஷம் வைப்பது இன்னொரு தர்மம். புதிதாக வைப்பதோடு, இருக்கும் விருக்ஷங்களை வெட்டாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். புதிதாக வைக்கிற செடிக்குத் தினம் ஜலம் விட்டு, அது விருக்ஷமாக வளரப் பண்ண வேண்டும். 'வன மஹோத்சவம்' என்று இன்றைக்குப் பெரிய மனுஷ்யர்கள் வந்து செடி நட்டுவிட்டு நாளைக்கே அதற்கு ஜலம் விட ஆள் இல்லாமல் அது பட்டுப் போனால் என்ன பிரயோஜனம்? இது மாதிரி டெமான்ஸ்ட்ரேஷன், வெளி வேஷம் நமக்கும் உதவாது, லோகத்துக்கும் உதவாது. இதற்குப் பதில் யாருக்கும் தெரியாமல் ஒருத்தன் ஏதோ ஓர் ஒற்றையடிப் பாதையில் உள்ள முள்ளை, கண்ணாடியை அப்புறப்படுத்தி வந்தால் அதுவே மற்றவர்களுக்கு வழியைச் சுத்தி பண்ணுவதோடு இவனுக்கும் சித்த சுத்தியைக் கொடுத்துவிடும்.

ஒவ்வோர் அவயவத்தாலும் ஏற்படக் கூடிய தோஷத்தைப் போக்கிக் கொள்ள அந்த அவயவத்தாலேயே செய்யக் கூடிய புண்ய கர்மாக்கள் இருக்கின்றன. குப்பைத் தொட்டியான மனசைச் சுத்தம் பண்ண அந்த மனசாலேயே தியானம் செய்ய முடிகிறது. கண்டதைப் பேசுகிற நாக்கைச் சுத்தப்படுத்திக் கொள்ள அந்த நாக்காலேயே பகவந் நாமாவைச் சொல்ல முடிகிறது. குயுக்தி எல்லாம் பண்ணும் மூளையைச் சுத்தமாக்கிக் கொள்ள அந்த மூளையாலேயே தத்துவ ஆராய்ச்சி பண்ண முடிகிறது. இப்படியே, இந்த சரீரத்தால் — கையாலும், காலாலும், உடம்பாலும் — எத்தனையோ தப்பு தண்டாப் பண்ணுகிறோமல்லவா? அதை இந்தச் சரீரத்தாலேயேதான் சுத்தப் படுத்திக்கொள்ள வேண்டும். சரீரப் பிரயாசையாலேயே பண்ணிக்கொள்ளும் இந்த சுத்தம்தான் பொதுக் காரியங்களான பூர்த்த தர்மங்கள்— ஸோஷல் ஸர்வீஸ் — அத்தனையும். சரீரப் பிரயாசையாலேயே இது சித்த சுத்தியைத் தரக் கூடியது. ஏனென்றால், சரீரத்தால் செய்கிற இந்தக் காரியங்களுக்கு மூலமான பரோபகாரம் என்ற எண்ணம் நம் சித்தத்தில் இருப்பதுதான்.

தயை என்பது ஒவ்வொருவர் மனதிலும் இருக்க வேண்டிய உயர்ந்த குணம். அந்த தயைக்கு உருக் கொடுக்கும்படியான ஒரு காரியத்தைச் சரீரத்தினாலும் அவசியம் செய்ய வேண்டும். (தொடரும்)

# பிறந்த 3ம் மாதம் தொடங்கும் முதல் திட உணவு குழந்தையின் வருங்கால வாழ்வையே தீர்மானிக்கத் தக்கது.

## பால் மட்டும் கொடுத்தால் போதாது என்கிறார்கள் டாக்டர்கள்



**டாக்டர்கள் சிபாரிசு செய்வது**

# ஃபாரெக்ஸ்®

**விரைவான முழு வளர்ச்சிக்கான**
**சரிவிகிதச் சத்து நிரவிய திட உணவு**



பச்சிளம் தேகமும் மூளையும் வேகமாக வளரத் துடிப்பவை. அதற்கு ஈடுகொடுக்கப் பால் மட்டும் போதுமானதாகாது. தாய்ப்பாலிலிருந்து கெட்டி உணவுக்கு மாறவேண்டும்—மூன்றும் மாதமே; மென்றுதின்னப் பழக்குங்கள்... மேன்மையான வளர்ச்சிக்குத் திறவுகோலாக உதவும் திட உணவு ஃபாரெக்ஸ் ஒன்றுதான்—பச்சிளம் தீரண உறுப்புகளுக்கு உகந்தது.

**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்; காரணம்,**
தாய்ப் பால் விடுக்கும் தடுமாற்ற மாதங்களில் பாப்பாவின் பத்துவித வளர்ச்சிகளுக்கும் நிறைவூட்டும் **ஒப்பற்ற சரிவிகிதச் சத்துணவு இதுவே.**
இரத்தச் செழிப்புக்கும் தெம்புக்கும் நல்லுசிதமான அளவுக்கு (இதுபோன்ற வேறெந்தத் திட உணவிலும் அமையாத அளவுக்கு) இரும்புச் சத்து; எலும்புக்கு உறுதியும், பல்லுக்குப் பலமும் தரும் கால்ஷியம், வைட்டமின் D2; மூளையும் உடலும் விரைந்து வளர உகந்த புரதச் சத்துக்கள்; வளரும் உடம்புக்குத் தேவையான சக்தி—இவ்வளவும் அடங்கியது ஃபாரெக்ஸ்; எனவே... பாலூட்டும் பழக்கத்தை மாற்றுவதற்கான வேறு எந்த திட உணவையும் விட அதிகமாக அதிகத் தாய்மார்கள் ஆதரிப்பது ஃபாரெக்ஸ்.
பழங்கள், காய்கறிகள், பருப்பு, இறைச்சி, முட்டை போன்ற எந்த முக்கிய உணவுடனும் கலந்து கொடுக்க இனிமையானது ஃபாரெக்ஸ்.
மென்றுதின்னப் பழக்க...கூடிய விரைவிலே குடும்ப உணவுகளிடம் குழந்தையை இனிதே வரவேற்க...
**அதி உன்னதமான முதல் திட உணவு ஃபாரெக்ஸ்.**

**இலவசமான எமது ஃபாரெக்ஸ் கைப் புத்தகம், 2-ரூபா தள்ளுபடித் திட்டம்—இரண்டையும் பற்றி அறிய, எழுதுங்கள்.**
(புத்தகம் எந்த மொழியில் எனக் குறிப்பிட்டு) உங்கள் பெயர், விலாசத்தை எழுதி, 25 பைசா தபால் வில்லையோடு அனுப்புக இம் முகவரிக்கு: தபால் பை நம்பர் 19119, பம்பாய் 400 025.




க்ளாக்ஸோ

LIL.GF. 53-140 TH

# பார்த்திபன் கனவு

அமரர் கல்கி

## அத்தியாயம் 9

## விக்கிரமன் சபதம்

சித்திரங்கள் எல்லாம் பார்த்து முடிந்ததும் விக்கிரமன் தயங்கிய குரலில், ''அப்பா!'' என்றான். மகாராஜா அவனை அன்பு கனியப் பார்த்து ''என்ன கேட்க வேண்டுமோ கேள், குழந்தாய்! சொல்ல வேண்டியதை யெல்லாம் தயங்காமல் சொல்லிவிடு; இனிமேல் சந்தர்ப்பம் கிடைப்பது அரிது'' என்றார்.

''ஒன்றுமில்லை, அப்பா! இந்தச் சித்திரங்கள் எல்லாம் எவ்வளவு நன்றாக இருக்கின்றன என்று சொல்ல ஆரம்பித்தேன். இவ்வளவு அற்புதமாய்ச் சித்திரம் எழுத எப்பொழுது கற்றுக்கொண்டீர்கள்? நமது சித்திர மண்டபத்திலே கூட இவ்வளவு அழகான சித்திரங்கள் இல்லையே!'' என்றான் விக்கிரமன்.

மகாராஜா மைந்தனைக் கட்டி அணைத்துக் கொண்டார். ''என் கண்ணே! என்னுடைய சித்திரத் திறமையை நீ ஒருவன் வியந்து பாராட்டியதே எனக்குப் போதும், வேறு யாரும் பார்த்துப் பாராட்ட வேண்டியதில்லை. என் மனத்திலிருந்த ஏக்கம் இன்று தீர்ந்தது'' என்றார்.

''ஆனால் அப்பா! எதற்காக உங்கள் வித்தையை நீங்கள் இவ்விதம் ஒளித்து வைத்திருக்க வேண்டும். இந்த ஆச்சரியமான சித்திரங்களைப்பற்றி நீங்கள் வெட்கப்படவேண்டிய அவசியமென்ன? ஆகா! இந்த உருவங்கள் எல்லாம் எவ்வளவு தத்ரூபமாய் உணர்ச்சி பெற்று விளங்குகின்றன! முகங்களிலேதான் எத்தகைய ஜீவ களை! இவ்வளவு ஆச்சரியமான சித்திரங்களை வேறு யார் எழுத முடியும்? ஏன் இந்த இருட்டு மண்டபத்தில் இவற்றைப் பூட்டி வைத்திருக்க வேண்டும்? எல்லோரும் பார்த்து சந்தோஷப்பட்டாலென்ன?'' என்று விக்கிரமன் ஆத்திரமாய்ப் பேசினான்.

அப்போது பார்த்திப மகாராஜா சொல்லுகிறார்:

''கேள், விக்கிரமா! இந்த உலகத்தில் எவன் அதிகாரமும் சக்தியும் பெற்றிருக்கிறானோ, அவனிடம் உள்ள வித்தையைத்தான் உலகம் ஒப்புக்கொண்டு பாராட்டும். காஞ்சியில் மகேந்திர சக்கரவர்த்தி இருந்தாரல்லவா? ஒரு தடவை பெரிய வித்வத் சபை கூடி அவருக்குச் 'சித்திரக்காரப் புலி' என்ற பட்டம் அளித்தார்கள். மகேந்திர வர்மருடைய சித்திரங்கள் மிகவும் சாமானியமானவை. ஆனாலும் அவற்றைப் புகழாதவர் கிடையாது. இப்போதுள்ள நரசிம்மச் சக்கரவர்த்திக்கு இது மாதிரி எத்தனையோ பட்டப் பெயர்கள் உண்டு. சித்திரக் கலையில் சிங்கம்! கான வித்தையில் நாரதர்! சிற்பத்தில் விசுவகர்மா! — உலகம் இப்படியெல்லாம் அவரைப் போற்றுகிறது. ஏன்? அவரிடம் பெரிய சைனியம் இருப்பதனாலேதான்; அவருடைய சாம்ராஜ்யம் பெரியதாய் இருப்பதனால்தான்! குழந்தாய்! தெய்வத்துக்கு ஏழை, செல்வன் என்ற வித்தியாசம் இல்லை. இறைவனுக்குச் சக்கரவர்த்தியும் ஒன்றுதான்; செருப்புத் தைக்கும் சக்கிலியனும் ஒன்றுதான். ஆனாலும், இந்த உலகத்தில் தெய்வத்தின் பிரதிநிதிகளாயிருப்பவர்கள் கூட, பெரிய படைபலம் உள்ளவன் பக்கமே தெய்வமும் இருப்பதாய்க் கருதுகிறார்கள். மகேந்திரன் வெகுகாலம் ஜைன மதத்தில் இருந்தான். சிவனடியார்களை எவ்வளவோ துன்பங்களுக்கு உள்ளாக்கினான். பிறகு, அவனுக்குத் திடீரென்று ஞானோதயம் உண்டாயிற்று. சிவபக்தன் என்று வேஷம் போட்டு நடித்தான். விக்கிரமா! மகேந்திரனும் சரி, அவன்



மகன் நரசிம்மனும் சரி, நடிப்புக் கலையில் தேர்ந்தவர்கள். விதம் விதமான வேஷங்கள் போட்டுக் கொள்வார்கள். நம்பினவர்களை ஏமாற்றுவார்கள். இவர்களுடைய சிவபக்தி நடிப்பு உலகத்தை ஏமாற்றி விட்டது. புராதன காலத்திலிருந்து சோழ வம்சத்தினர்தான் சைவத்தையும் வைணவத்தையும் வளர்த்து வந்தார்கள். சிராப்பள்ளிப் பெருமானையும் ஸ்ரீரங்கநாதனையும் குல தெய்வங்களாகப் போற்றி வந்தார்கள். ஆனால் இன்றைய தினம் சிவனடியார்களும், வைஷ்ணவப் பெரியார்களும், யாருடைய சபா மண்டபத்துக்குப் போகிறார்கள்? திரிலோகாதிபதியான காஞ்சி நரசிம்மச் சக்கரவர்த்தியின் ஆஸ்தான மண்டபத்துக்குத்தான்! என்னுடைய சித்திரங்களைப் பிறர் பார்ப்பதை நான் ஏன் விரும்பவில்லை என்று இப்போது தெரிகிறதா? சோழநாடு சிற்றரசா யிருக்கும்வரையில், 'பார்த்திபன் சித்திரம் வேறு எழுத ஆரம்பித்து விட்டானா?' என்று உலகம் பரிகசிக்கும். விக்கிரமா! இன்னொரு விஷயம் நீ மறந்து விட்டாய்.....'' என்று நிறுத்தினார் மகாராஜா.

''என்னப்பா?'' என்று விக்கிரமன் கேட்டான்.

''இவை கேவலம் சித்திரத் திறமையைக் காட்டுவதற்காக மட்டும் எழுதிய சித்திரங்கள் அல்லவே, குழந்தாய்! என்னுடைய மனோரதங்களை, என் இருதய அந்தரங்கத்தில் பொங்கிக் கொண்டிருக்கும் ஆசைகளை அல்லவா இப்படிச் சித்திரித்திருக்கிறேன்? இந்தச் சித்திரங்களை இப்போது பார்க்கிறவர்கள் சிரிக்க மாட்டார்களா? 'வீண் ஆசை கொண்டவன்', 'எட்டாத பழத்துக்குக் கொட்டாவி விடுகிறவன்' என்றெல்லாம் பரிகசிக்க மாட்டார்களா? ஆகையினாலேயே இந்த மண்டபத்தை இப்படி இருள் சூழ்ந்ததாய் இப்போது வைத்திருக்கிறேன். இந்தச் சித்திரக் காட்சிகள் எப்போது உண்மைச்



சம்பவங்களாகத் தொடங்குமோ, அப்போதுதான் மண்டபத்தில் வெளிச்சம் வரச் செய்ய வேண்டும். அப்போதுதான் எல்லா ஜனங்களும் வந்து பார்க்கும்படி மண்டபத்தைத் திறந்து விட வேண்டும். அந்தப் பாக்கியம், விக்கிரமா, என் காலத்தில் எனக்குக் கிடைக்கப் போவதில்லை; – உன்னுடைய காலத்திலாவது நிறைவேற வேண்டும் என்பது என் ஆசை. என்னுடன் நீயும் போர்க்களத்துக்கு வருவதாகச் சொல்வதை நான் ஏன் மறுக்கிறேன் என்று இப்போது தெரிகிறதல்லவா?''

''தெரிகிறது அப்பா!''

''என் கனவை நிறைவேற்றுவதற்காக நீ உயிர் வாழ வேண்டும். சோழ நாட்டின் உன்னதமே உன் வாழ்க்கையின் நோக்கமாக இருக்க வேண்டும். சோழர் குலம் பெருமை அடைவதே அல்லும் பகலும் உன்னுடைய நினைவாக இருக்கவேண்டும். சோழரின் புலிக்கொடி வேறு எந்த நாட்டின் கொடிக்கும் தாழாமல் வானளாவிப் பறக்கவேண்டும் என்று சதாகாலமும் நீ சிந்திக்க வேண்டும். நாளை மறுதினம் நான் போருக்குக் கிளம்புகிறேன். யுத்த களத்திலிருந்து திரும்பி வருவேன் என்பது நிச்சயமில்லை. விக்கிரமா! போர்க்களத்தில் மடிகிறவர்கள் வீர சொர்க்கம் அடைகிறார்களென்று புராணங்கள் சொல்லுகின்றன. ஆனால், நான் வீர சொர்க்கம் போக மாட்டேன். திரும்பி இந்தச் சோழ நாட்டுக்குத்தான் வருவேன். காவேரி நதி பாயும் இந்தச் சோழ வள நாடுதான் எனக்குச் சொர்க்கம். நான்

இறந்த பிற்பாடு என்னுடைய ஆன்மா இந்தச் சோழ நாட்டு வயல் வெளி களிலும், தென்னந் தோப்புக்களிலும் கோயில் குளங்களிலும் நதிக் கரை களிலும்தான் உலாவிக் கொண்டிருக் கும். அப்போது 'பார்த்திபன் மகனால் சோழர் குலம் பெருமை அடைந்தது' என்று ஜனங்கள் பேசும் வார்த்தை என் காதில் விழுமானால் அதைவிட எனக்கு ஆனந்தம் அளிப்பது வேறொன்றும் இராது. எனக்கு நீ செய்ய வேண்டிய ஈமக் கடன் இதுதான். செய்வாயா, விக்கிரமா!''

இளவரசன் விக்கிரமன், ''செய்வேன் அப்பா ! சத்தியமாய்ச் செய்வேன் !'' என்று தழுதழுத்த குரலில் சொன்னான். அவன் கண்களில் நீர் துளித்து முத்து முத்தாகக் கீழே சிந்திற்று.

இதையெல்லாம் பார்த்துக் கொண் டும் கேட்டுக் கொண்டும் இருந்த பொன்னனுடைய கண்களிலிருந்தும் தாரை தாரையாகக் கண்ணீர் பெருகிக் கொண்டிருந்தது.

மகாராஜா அவனைப் பார்த்து, ''பொன்னா! எல்லாம் கேட்டுக் கொண் டிருந்தாயல்லவா ? இளவரசரிடம் உண் மையான அன்புள்ள சிலராவது அவருக் குத் துணையாக இருக்க வேண்டாமா? அதற்காகத்தான் உன்னை இருக்கச்சொல் லுகிறேன். என்னுடன் நீ யுத்தத்துக்கு வருவதைக் காட்டிலும் இளவரசருக்குத் துணையாக இருந்தாயானால், அதுதான் எனக்குத் திருப்தி அளிக்கும். இருக் கிறாயல்லவா?'' என்று கேட்டார்.

பொன்னன் விம்மலுடன், ''இருக் கிறேன், மகாராஜா !'' என்றான்.

## அத்தியாயம் 10

# படை கிளம்பல்

உறையூரில் அன்று அதிகாலையி லிருந்து அல்லோல கல்லோலமாயிருந் தது. பார்த்திப மகாராஜாவின் பட் டாபிஷேகத்தின் போதும் மகேந்திர வர்ம சக்கரவர்த்தியின் விஜயத்தின் போதுகூட, உறையூர் வீதிகள் இவ் வளவு அழகாக அலங்கரிக்கப்படவில்லை என்று ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். வீட்டுக்கு வீடு தென்னங் குருத்துக்களி னாலும் மாவிலைகளினாலும் செய்த தோரணங்கள் தொங்கிக் கொண்டிருந் தன. வீடுகளின் திண்ணைப்புறங்களில் எல்லாம், புதிய சுண்ணாம்பும் சிவப்புக் காவியும் மாறி மாறி அடித்திருந்தது. ஸ்திரீகள் அதிகாலையிலேயே எழுந் திருந்து, தெரு வாசலைச் சுத்தம் செய்து அழகான கோலங்கள் போட்டு, வாச லில் குத்துவிளக்கு ஏற்றி வைத்தார்கள். பிறகு, ஆடை ஆபரணங்களினால் நன்கு அலங்கரித்துக் கொண்டு, போருக்குப் படை கிளம்பும் வேடிக்கை பார்ப்பதற் காக வாசல் திண்ணைகளிலோ, மேல் மாடிகளின் சாளரங்களின் அருகிலோ வந்து நின்று கொண்டார்கள்.

விடிய ஒரு சாமம் இருக்கும்போதே, அரண்மனையில் உள்ள பெரிய ரண பேரிகை முழங்கத் தொடங்கியது. அதனுடன் வேறு சில சத்தங்களும் கலந்து கேட்கத் தொடங்கின. குதிரைகள் கனைக்கும் சத்தம், யுத்த வீரர்கள் ஒருவரை யொருவர் கூவி அழைக்கும் குரல், அவர்கள் இடை யிடையே எழுப்பிய வீர முழக்கங்களின் ஒலி, வேல்களும் வாள்களும் ஒன்றோ டொன்று உராயும்போது உண்டான கண கண ஒலி, போருக்குப் புறப்படும் வீரர்களை அவர்களுடைய தாய்மார்கள் வாழ்த்தி அனுப்பும் குரல், காதலிகள் காதலர்களுக்கு விடை கொடுக்கும் குரல் — இவ்வளவுடன், வழக்கத்துக்கு முன்னதாகவே துயில் நீங்கி எழுந்த பறவைகளின் கல கல சத்தமும் சேர்ந்து ஒலித்தது.

சூரிய உதயத்துக்கு முன்னாலிருந்தே அரண்மனை வாசலில் போர் வீரர்கள் வந்து குவியத் தொடங்கினார்கள். படைத் தலைவர்கள் அவர்களை அணி வகுத்து நிற்கச் செய்தார்கள். வரிசை வரிசையாகக் குதிரைப் படைகளும், யானைப் படைகளும், காலாட்படை களும் அணிவகுத்து நிறுத்தப்பட் டன. எல்லாப் படைகளுக்கும் முன்னால் சோழர்களின் புலிக்கொடி வானளாவிப் பறந்தது. சங்கம், கொம்பு, தாரை, தப்பட்டை முதலிய வாத்தியங்களை முழக்குகிறவர்கள் படைகளுக்கு இடை யிடையே நிறுத்தப்பட்டார்கள். பெரிய பேரிகைகளைச் சுமந்த ரிஷபங்களும் ஆங் காங்கு நின்றன. பட்டத்துப் போர் யானை அழகாக அலங்கரிக்கப்பட்டு அரண்மனை வாசலில் கொண்டு வந்து நிறுத்தப்பட்டது.

இந்த மாதிரி அணிவகுப்பு நடந்து கொண்டிருக்கையில், அடிக்கடி போர் வீரர்கள், ''வீரவேல்'', வெற்றிவேல்'' என்று முழங்கிக் கொண்டிருந்தார்கள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அரண் மனை முன் வாசலில் கலகலப்பு ஏற்பட்

# உங்கள் குழந்தையின் எதிர்காலம் எப்படி?





## அபரிமிதமான க்ளாக்ஸோ குழந்தைப் பாலுணவுகள் குறைவின்றி கிடைக்கும்!

உங்கள் குழந்தைக்கு இப்போது யோக காலம். க்ளாக்ஸோ குழந்தைப் பாலுணவுகள் உங்கள் வீடு தேடி வருகின்றன. உங்கள் குழந்தையின் ஆரோக்கியத்திற்கும் ஆனந்தத்திற்கும் குறை விருக்காது.

சிறந்த ஆரோக்கியத்திற்கு முதலிடம் தரப் படுகிறது. உங்கள் குழந்தை கொழுகொழு வெனவும் சுறுசுறுப்புடனும் இருக்கும். க்ளாக்ஸோ குழந்தைப் பாலுணவுகள் மூலம் ஊட்டம் பெறும் உங்கள் கண்மணி குழந்தை யின். ஒளிமிக்க கண்கள், வலுவான எலும்புகள், அழகு கொஞ்சும் புன்முறுவல்—இவையாவும் உங்களுக்கு எல்லையில்லா மகிழ்ச்சியைத் தரும். இளம் சிவப்பிலும் நீல நிறத்திலும் அவனுக்கு ஆடையுடுத்தி ஆனந்தப்படுங்கள்.

அதிர்ஷ்டம் வந்து சேர ஒரு டின் **க்ளாக்ஸோ ஸன்ஷைனே** அல்லது **ஆஸ்டர்மில்கோ** கைவசம் வைத்திருங்கள். அவை சுலபமாகக் கிடைக்கின்றன அதுவும் உங்கள் கைக்கெட்டும் விலையில்.

க்ளாக்ஸோ குழந்தைப் பாலுணவுகள், வைட்டமின் டி செறிந்துள்ளவை. கண் – நோய் மற்றும் பல் சொத்தையிலிருந்து உங்கள் குழந்தைகளைப் பாதுகாக்கின்றன. உறுதியான எலும்புகளையும், ஊறுபடாத பற்களையும், தளராத தசையையும் அடைய பெரிதும் உதவுகின்றன.




**க்ளாக்ஸோ குழந்தைப் பாலுணவுகள்**

அடுத்து உணர்ச்சிகளின் புதுமையினு லும் வருத்தத்தினாலும் அவர் குழம்பி நின் றார். அவரைத் தாக்கும் புதுமைக்குள்ளேயே, உணர்ச்சிகளின் பழைமை புகுந்து கொண்டு அவரைக் கேலி செய்தன.

ஏதோ ஓர் ஏக்கம் அவரை வாட்டத் தொடங்கிற்று. புதிதாக ஓர் இடத்துக்கு வந்துவிட்ட குழந்தையைப் போல் ஒரு தவிப்பு ஒவ்வொரு நிலையிலும் தளர் காட்டிற்று. அவ ருடைய துடிப்பும், கலகலப்பும், வெளி நட மாட்டமும் கொஞ்சம் கொஞ்சமாக அடங்கிப் போயின. அன்றையச் சூழ்நிலைக்குப் பொருத்தமில்லாத ஒரு மனப்பான்மை அவ ரிடம் நீடித்து அவரை அலைக்கத் தொடங் கிற்று.

"அப்பா !" என்று கூப்பிட்டார்.

அவர் திரும்பிப் பார்க்கவில்லை. கண்ணில் நிறைந்த நீர் கன்னங்களில் வழிந்து ஓடிற்று. அவர் துடைக்கக்கூட முயலவில்லை. அவ ருக்கு உள்ளே ஏதோ தகர்ந்து விட்டது.

"எனக்குப் புதுமை வேண்டாம் ரவி. பழைமையே போதும். டானிக் தேவைப் படுவது என் உடலுக்கு அல்ல. மனத்துக்குத் தான். என்னைத் தனியாக விட்டுவிடு" என்று மெதுவாக மென்று விழுங்கிப் பதில் சொன்னார்.

"ஏன் அப்பா? என்ன சொல்லுகிறீர்கள்?"

"நீ கால கடிகாரத்தை நாற்பது ஆண்டுகள் பின்னால் வைத்துவிட்டாய். என் மனம் அந்த நிலையில்தான் இருக்கிறது. உடம்பு மட்டும்தான் இன்றைய நிலையில் இருக்கிறது. ஒன்றாய் இருந்து கொண்டு, மனமும் உடலும் இரு வேறு நிலைகளில் என்னை இப்படி இழுக் கும் அவஸ்தை தாங்கக் கூடியதாக இல்லை. இதைவிடப் பழைமையான மனப்பான்மைக்கு ஏற்றபடி உடலிலும் முதுமை வந்துவிடுவதே பொருத்தம் என்று நினைக்கிறேன். என் னுடைய மனத்தின் ஏக்கம் என் உடம்பில் பிரதிபலிக்கிறது. அதனால்தான் இந்த ஒரு வருஷத்திலேயே அதற்குப் பத்து வயது அதிக மாகக் கூடிவிட்டது. இது அவசர ஓட்டமாக இருக்கலாம். ஆனால் இதுதான் இயற்கை. என் உடம்பு மனத்துடன் ஜோடி சேரப் பார்க்கிறது. அதைப் பிரிக்காதே. இன்னும் நாலைந்து ஆண்டுகளில் நான் எழுபது வயதுக் கிழவன் ஆகிவிடுவேன். அப்போது எல்லாம் சரியாக இருக்கும். கௌரியும்கூடத் தன் முதுமையைக் குனிந்து பார்த்து ஏங்க வேண்டியதில்லை."

"அப்பா ! நீங்கள் சொல்வது — இப்படியே விட்டுவிட்டால் சீக்கிரத்தில் உங்கள் வாழ்க்கை முடிந்து விடும் !"

"தெரியும். அதில் என்ன தப்பு? நாற்பது ஆண்டுகளுக்குமுன் நேர்ந்தது போல, அது அகால மரணம் இல்லையே ? என்னைக் கடைசி யாகப் பார்ப்பவர்கள் "வாழ்க்கையை முழுவ தும் அனுபவித்துக் கனிந்து உதிர்ந்த பழம் இது !" என்றுதானே சொல்வார்கள் ? அதில் இயற்கை இல்லாத தன்மை ஏது ? இப்போது தெரியும் அசம்பாவிதம் அந்த முடிவில் இருக்காதே ?"

"அப்பா ! உங்களுக்கு இளமையைத் தர ஆசைப்பட்டேன். மீண்டும் ஒரு தடவை முழு வாழ்க்கையை நீங்கள் வாழ்ந்து அனுபவிக்க, ஒரு வாய்ப்புத் தர வேண்டும் என்று ஆசைப் பட்டேன். நீங்கள் என்னை ஏமாற்று கிறீர்கள். என்னால் இதைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை !"

"இல்லை, ரவி ! இதுவே எனக்கு முழுத் திருப்தி. என் மனம் நன்றியால் நிறைந்து ததும்புகிறது. வயதான தந்தையின் ஆசை என்ன? தன் மகன் வளர்ந்து நல்ல நிலையில் இருப்பதைப் பார்ப்பதுதானே ? அது ஈடேறி விட்டது. இன்னும் என்ன பாக்கி ? உன் னிடம் நான் இனிமேல் கேட்டுக் கொள்ள விரும்புவதெல்லாம் ஒன்றே ஒன்றுதான். நீ அதை நிறைவேற்றுவாயா ?"

"என்னப்பா ? சொல்லுங்கள். உங்களுக் காக நான் எதையும் செய்வேன்."

"நீ அதைச் செய்ய வேண்டும். நான் இறந்து போனால் மறுபடியும் என்னை உயிர்ப் பித்துவிடாதே. என் உடலை அப்படியே வாடும்படி விட்டுவிடு. அதற்கு உயிர் கொடுத்துவிடாதே. தாய் மண்ணில் அது மறைந்து போகட்டும். அதற்கு வழியே இல் லாமல் செய்ய வேண்டும் என்று ஆசைப் படாதே. என் வேண்டுகோளைப் பூர்த்தி செய்வாயா ரவி ?"

"ஆகட்டும், அப்பா !"

# பாடுவோம் பாப் மியூசிக்!

கதை:
தமயந்தி/சாருகேசி
சித்திரம்: ராஜு

9
















மர்மமான விஷயம் என்னவோ இருக்கிறது. நீங்கள் தான் கண்டு பிடிக்க வேண்டும்.
கிடாரைத் தூக்கி வைத்துவிட்டுக் கறுப்புக் கண்ணாடியை மாட்டிக் கொள் என்கிறாய்.


காரணமெதுவும் இல்லாமல் அப்பா இப்படியெல்லாம் செய்ய மாட்டார். இதில் நிச்சயமாகப் பின்னணியில் ஏதோ இருக்கிறது.


பின்னணி இசை தான் இதுவரை கொடுத்து வந்தேன். இனி பின்னணியையே கண்டுபிடி என்கிறாயாக்கும்?


எனக்கென்னவோ அந்த எஸ். எல். லிங்கம் வேலையாயிருக்குமோ என்று தோன்றுகிறது. இரண்டு பேரும் போனில் மணிக் கணக்கில் பேசிக் கொள்கிறார்கள்!
அப்படியா? க்ளூ தந்து விட்டாய். இனியும் கண்டு பிடிக்காமல் இருக்க முடியுமோ? முயல்கிறேன்.


ஜாக்கிரதை மிஸ்டர் அருண். எஸ்.எஸ். லிங்கம் வீட்டில் கூர்க்கா, அல்சேஷியன் நாய் எல்லாம் உண்டு.
நான் என்ன, கூர்க்காவிடமும் அல்சேஷியனிடமுமா பேசப் போகிறேன்? எனக்குக் கூர்க்கா பாஷையும் தெரியாது, நாய் பாஷையும் தெரியாது.


ஏதாவது ஆபத்து என்று தெரிந்தால் விட்டு விடுங்கள்.
எதை? உயிரையா?

தொடரும்



# புது உலகம் கண்டேன்!



○ வார்ஸாவில் உள்ள ஓர் அரண்மனை

○ செட்டி நாட்டுக் கட்டிடக் கலைக்கு ஒப்பான போலிஷ் கட்டிடக் கலை

—நா. பார்த்தசாரதி

## 9. கலைச் சுரங்கமும் உப்புச் சுரங்கமும்

இந்தியாவில் தமிழ் நாட்டைப் போல், தமிழ் நாட்டில் மதுரையைப் போல் போலந்தின் கலாசார கேந்திரம் என்று 'க்ராக்கோ' நகரத்தைச் சொல்ல வேண்டும். 1930க்கும் 44க்கும் இடைப்பட்ட காலத்தில் போலந்தின் பல முக்கிய நகரங்கள் நாஜிப் படைகளால் தரை மட்டமாக்கப்பட்டபோது கூட அன்று கண்ட மேனிக்கு அழிவின்றி இருந்த நகரம் க்ராக்கோ. போலந்தின் பழைமையையும் கலாசாரத்தையும் வரலாற்றுப் பெருமையையும், வேறு பல முக்கிய அம்சங்களையும் பார்க்க வேண்டுமானால் க்ராக்கோவுக்குத்தான் போக வேண்டியிருக்கும். க்ராக்கோ நகரையும் அதன் சுற்றுப்புறங்களையும் பார்க்காமல் போலந்து பயணமே நிறைவு அடைய முடியாது.

மிகப் பழைமையான சர்ச்சுகள், கோட்டைகள், ஐரோப்பாவின் மிகப் பழைமையான பல்கலைக் கழகம், பல புகழ் பெற்ற வரலாற்று நினைவுச் சின்னங்கள், எல்லாவற்றையும் க்ராக்கோவிலும் (Krakow) சுற்றுப்புறங்களிலும் பார்க்கலாம். போலந்தின் 'ஸ்விட்சர்லாந்து' என்று வருணிக்கப்படும் ஸாக்கோபானே (Zokopane) மலைவாசப் பகுதியும் க்ராக்கோ நகரத்துக்கு அருகேதான் அமைந்திருக்கிறது. செக்கோஸ்லேவேக்கியாவையும் போலந்தையும் பிரிக்கும் எல்லைப் பகுதியாக இருக்கும் இந்த ஆரோக்கியமான மலை நகரம் தாத்ரா குன்றுத் தொடரில் இணைந்திருக்கிறது. ஸ்விட்சர்லாந்தின் பனிக்கால விளையாட்டுக்கள் இங்கும் உண்டு. கட்டிடங்கள், தோற்றம், தெருக்கள் அமைப்பு எல்லாவற்றிலும் ஒரு பழைய கலாசாரப் பின்னணி தெரிகிற நகரமான க்ராக்கோவை





○ உப்புச் சுரங்கத்தில் உள்ள பெரிய அரங்கம்

ரஷ்யாவின் லெனின் கிராட், இங்கிலாந்தின் எடின்பரோ, இந்தியாவின் ஜெய்ப்பூர், மதுரை போன்றவற்றோடு ஒப்பிடலாம். சில தெருக்களில் ட்ராம் ஓடும்போது இருபுறமும் உள்ள கட்டிடங்கள் அதிரக்கூடிய அளவுக்குப் பழைய வீடுகள் மாளிகைகள் எல்லாம் க்ராக்கோ நகரில் இருக்கின்றன.

ஐரோப்பாவிலேயே மிகப் பழைய மூன்று கல்விக் கேந்திரங்களில் ஒன்றாகிய 'யாகிலோனியன்' ( Jogiellonion ) பல்கலைக் கழகம் இந்த க்ராக்கோ நகரில்தான் இருக்கிறது. இன்றைக்கு 612 ஆண்டுகளுக்கு முன் (1364ல்) நிறுவப்பட்ட இந்தப் பல்கலைக் கழகமும் சரித்திரப் பிரசித்தி பெற்ற வாவெல் கோட்டையும் (Wawel castle) க்ராக்கோ நகரில் தவறாமல் பார்க்க வேண்டியவை. கிரீஸின் புகழ் பெற்ற 'அக்ரோ போலிஸ்' சின்னம் போல வாவெல் குன்றிலுள்ள 'வாவெல் கோட்டை'—போலந்தின் 'அக்ரோ போலிஸ்' — எனச் சுற்றுப் பிரயாணிகளால் கொண்டாடப்படுகிறது. நகரின் மையமாக உள்ள இப்பகுதியில் இணைந்துள்ள வாவெல் மியூஸியமும் வாவெல் கதீட்ரலும் அருகேயுள்ள செயின்ட் மேரி கோவிலும் சுற்றிலுமுள்ள போலிஷ் கலாசாரத்தைப் பிரதிபலிக்கும் அழகிய பழங் காலத்து வீடுகளும் கண்கொள்ளாக் காட்சியாக விளங்குகின்றன. வார்ஸா நகரிலுள்ள பழைய வார்ஸா மார்க்கெட் சதுக்கம் போலவே க்ராக்கோ நகரிலும் நெருக்கமான கடைகள் சர்ச்சுகளின் நடுவே ஒரு சதுக்கம் அமைந்திருக்கிறது. போலந்தின் நகரங்கள் எல்லாமே பழைய நாளில் ஒரு மார்க்கெட் சதுக்கத்தை (Market square) மையமாகக் கொண்டுதான் அமைந்திருக்க வேண்டும் என்று இதிலிருந்து தெரிந்தது.

போலந்தின் தலைநகராகிய வார்ஸாவிலிருந்து ரயிலில் ஏழெட்டு மணி நேரமும் விமானத்தில் சுமார் ஒரு மணி நேரமும் பிரயாணம் செய்ய வேண்டிய தொலைவில் இருந்தாலும் 'க்ராக்கோ' நகருக்குப் போனவுடன் மதுரைக்குப் போய் விட்ட உணர்வை நான் அடைய வேறு ஒரு காரணமும் இருந்தது. சிவகாசிக்கு அருகே உள்ள தாயில்பட்டி கிராமத்தைச் சேர்ந்த ராமசாமி என்ற என்ஜினியரிங் பட்டதாரி மேற்படிப்பான எம். டெக். பட்டத்துக்காகப் போலந்தில் ஸ்காலர்ஷிப் பெற்று இந்நகரில் படித்து வருகிறார். இவரை இங்கே சந்திக்க நேர்ந்தது. ஒரிஸ்ஸா, ஆந்திரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம் முதலிய பிற இந்தியப் பகுதிகளிலிருந்தும் படிக்க வந்திருக்கும் வேறு சில இந்திய மாணவர்களையும் சந்திக்க முடிந்தது.

இப்படிச் சந்தித்த இந்திய மாணவர்கள் சிலர் ஒரு போலிஷ் குடும்பத்துக்குச் சென்று அவர்களோடு சில மணி நேரம் தங்கிக் கவனிக்கும் வாய்ப்பை எனக்கு ஏற்படுத்திக் கொடுத்தனர். போலிஷ் மக்களின் இங்கிதமான பழகும் பண்புகளையும், விருந்துபசார நலனையும் அப்போது புரிந்து கொள்ள முடிந்தது. நான் சென்ற வீட்டில் நுழைவாயிலில் கிறிஸ்துமஸ் மரத்தின் பசுமையான இலைகளையும் பல நிறப் பூக்களையும் இணைத்துத் தோரணம் போலக் கட்டி அலங்கரித்திருந்தார்கள். அந்த அலங்காரம் என்னைக் கவரவே, 'அது எதற்காகச் செய்யப் பட்டிருக்கிறது' என்று விசாரித்தேன். அந்தக் குடும்பத்தில் இரண்டு தினங்களுக்கு முன்பு ஒரு திருமணம் நடந்ததாகத் தெரிவித்து விட்டு விதம் விதமான திருமணக் கேக்குகளைத் தட்டு நிறையக் கொண்டு வந்து நீட்டினாள் மணப் பெண்ணின் தாய். மணப் பெண்ணின் தந்தையும் சகோதரரும் எங்களோடு அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தார்கள்.

மாவிலையும், வாழை மரமும் தோரணம் கட்டிய புது மனைக் களை மாறாத தமிழ் நாட்டு மண வீடு ஒன்றிற்கும் அதற்கும் அதிக வேறுபாடு இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. வெளியே சென்றிருந்த மணமகளும் மணமகனும் சிறிது நேரத்தில் திரும்பி வந்தார்கள். அவர்களும் எங்களுக்கு அறி

○ தமிழகப் பழங்கால நினைவுகளை நினைவூட்டும் ஒரு போலிஷ் வாத்தியம்





"வள்ளுவர் கோட்ட மாடிப் படிக்கட்டில், கால் தடுக்கி உருண்டு விழுந்த என் நாத்தனாரைப் பார்த்து, 'இடுக்கண் வருங்கால் நகுக' என்று நான் கூறியது தப்பாம்டி!"

முகப்படுத்தப்பட்டு எங்களோடு அமர்ந்து உரையாடலில் கலந்து கொண்டார்கள். போலிஷ் குடும்ப வாழ்வு விவரங்களைப் பற்றி அவர்கள் எங்களுக்கும் இந்தியக் குடும்ப வாழ்வின் விவரங்களைப் பற்றி நாங்கள் அவர்களுக்கும் கூறினோம். திரும்பும்போது என் மனத்தில் நம் ஊரில் நமக்கு வேண்டிய ஒரு குடும்பத்தில் கல்யாணம் விசாரிக்கப் போய் விட்டு வந்த உணர்வுதான் இருந்தது.

நேரிலோ ஃபோனிலோ யாரிடம் உரையாடலைத் தொடங்கினாலும் ஓர் அழகான போலிஷ் தொடர் நம்மை உடனே கவரக் கூடியது. நான் க்ராக்கோ போனவுடன் ஓர் இந்திய நண்பரின் எண்ணுக்கு ஃபோன் செய்தேன். ஃபோனில் எதிர்ப்புறமிருந்து 'ஸ்லுகம்' (சுகம்) என்று பதில் வந்தது. தமிழில் சுகம் என்று பதில் வரவே நான் மலைப்படைந்து போனேன். பின்னால் பலர் அந்த வார்த்தையைப் பயன்படுத்தி அடிக்கடி பேசிய பின்பு அதன் அர்த்தத்தை விசாரித்தேன். ஆச்சரியமடைந்தேன். க்ஷேமலாப விசாரணைக்குப் பதிலாகக் கிடைப்பது போன்ற அந்த வார்த்தைக்கு "சொல்லுங்கள் கேட்கிறேன்" — (I am listening) என்பதாகப் பொருள் சொன்னார்கள். இப்படி சுகம், சுகம் என்று போலந்தில் எங்கும் யாரிடமும் சுகம் இருந்தது. 'சுகத்தோடு'தான் உரையாடல்கள் தொடங்கின. ரஷ்யன் போலிஷ் முதலிய மொழிகள் எல்லாம் 'ஸ்லாவோனிக்' மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தவையாக இருப்பதனால், சொற்கள் அமைப்பு, தொடர்கள், உச்சரிப்பு எல்லாவற்றிலும் பல ஒற்றுமைகள் இருக்கின்றன. இந்தி உச்சரிப்பையும் சம்ஸ்கிருத உச்சரிப்பையும் கேட்டுப் பழகிய ஓர் இந்தியனுக்கு ஸ்லாவோனிக் (Slavonic) மொழிகள் மிகவும் நெருக்கமாக இருப்பன போலத் தோன்றக்கூடியவை. சென்று வருகிறேன் என்பதற்கு ரஷ்யாவில் 'தஸ் விதான்ய' (குட்பை) என்றால் போலிஷ் மொழியில் 'த்ரோவிதான்ய' என்பது போல் சிறு மாறுதலுடன் அத்தொடர் உச்சரிக்கப் படுகிறது.

போலந்தில் க்ராக்கோ நகருக்குப் பக்கத்தில் நான் பார்த்தவற்றில் 'வியெலிச்கா' (Wieliczka) என்னும் உப்புச் சுரங்கத்தை ஒரு நாளும் மறக்க முடியாது. க்ராக்கோ நகரிலிருந்து சுமார் பத்து மைல் தொலைவு தெற்கே அமைந்திருக்கும் இந்த உப்புச் சுரங்கம் ஐரோப்பாவிலேயே ஒரு புதுமையாகப் போலந்தில் இருக்கிறது. கல்லுப்பு (Rock Salt) என்று நாம் சொல்லுகிறோமே அப்படிப்பட்ட உப்பைத் தோண்டி எடுக்கும் மிகப் பெரிய சுரங்கம் இது. பூமிக்குக் கீழே பல கல் தொலைவு ஆழ்ந்தும் அகன்றும் பரந்தும் கிடக்கிறது இச்சுரங்கம். சுரங்கத்தின் கீழே ஓர் உலகமே இருக்கிறது. ஏரிகள், தபாலாபீஸ், மியூசியங்கள், நடனக்கூடம், தியேட்டர். ஆஸ்துமா நோயாளிகள் சிகிச்சை பெற வசதியான உப்புக்காற்றுடன் கூடிய சானடோரியம், பெரிய சர்ச், சிற்பக்கூடங்கள் எல்லாமே இந்த உப்புச் சுரங்கத்துக்குள்ளே இருக்கின்றன என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

காலையில் பத்து மணிக்கு மின்சார ரயில் மூலம் க்ராக்கோவிலிருந்து இந்த உப்புச் சுரங்கப் பகுதிக்கு வந்து சேர்ந்த நான் சுரங்கத்தில் இறங்கத் தொடங்கியபோது பத்தரை மணி. உள்ளே இருக்கும் உலகத்தை எவ்வளவோ அவசரம் அவசரமாகச் சுற்றிப் பார்த்தும்கூட மாலை நாலரை மணி வரை ஆகிவிட்டது. அப்படியும் முழுமையாகப் பார்த்து முடித்த திருப்தி இல்லை எனக்கு.

சுரங்கத்துக்குள் கீழிறங்கவும் மேலே ஏறவும் லிஃப்ட் இருந்தாலும் கீழே இறங்கும்போது சுற்றிச் சுற்றி மரப் படிகளின் வழியே நடத்தித்தான் அழைத்துச் செல்கிறார்கள். காரணம் கீழே இறங்கிச் செல்லும்போது ஒவ்வொரு பகுதியாகப் புகுந்து சுற்றிக் காண்பிக்கவும் காணவும் படிகள் வழியே நடந்து செல்வது தான் வசதியாக இருக்கிறது. எல்லாவற்றையும் பார்த்து முடித்துவிட்டு மேலே ஏறும்போது எங்கும் தங்காமல் நேரே வெளியேறி வந்துவிட முடிவதால் லிஃப்டில் வந்துவிடுவது சௌகரியம் என்று வைத்திருக்கிறார்கள். லிஃப்ட்டும் சுரங்கங்களில் ஏறி இறங்குவதற்கான கரடு முரடான உபயோகத்துக்குரியது தான். கீழே சுரங்கத்துக்குள் சுற்றி வரும் வழிகளில் மின் விளக்கு ஒளி பளிச்சிட்டாலும் நகரின் தெருக்கள்போல் இருந்தாலும், வழிகாட்டியைப் பின்பற்றாமல் இஷ்டம்போல் போய் விட்டால் திரும்பி வழி கண்டுபிடித்து வருவது சிரமம்தான். உப்புப் பூத்த கற்பாறைகளிலேயே சிலைகள், கூடங்கள் சர்ச்சுகள் எல்லாம் அழகாகக் குடையப்பட்டிருக்கின்றன.

முதலில் அந்த உப்புச் சுரங்கம் எப்படி, யார் காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டுக் குடையப்பட்டது என்ற வரலாறே உப்புப் பாறைகளில் செதுக்கப்பட்டிருந்தது. பின்பு அந்தச் சுரங்கத் தொழிலாளிகள் பல்வேறு தலைமுறைகளில் மிகக் கடினமான அந்தச் சுரங்கப் பணிகளில் எப்படி எப்படி ஈடுபட்டார்கள் என்ற விவரங்கள் சிற்பங்களின் மூலமாகவே விளக்கப்பட்டிருந்தன.

குடையப்பட்டிருந்த பகுதிகளின் ஆழமும் அளவும், உயர அகலமும் பெரிது. அஜந்தா, எல்லோரா குகைகளை விடப் பெரியவையாக அவை குடையப் பட்டிருந்தன. மாளிகை போலவும், அரங்கம் போலவும் மாடங்கள் போலவும் குடையப்பட்டிருந்த சில பகுதிகள் மதுரை திருமலை நாயக்கர் மகால் அளவு கூட உயரமாகவும் கம்பீரமாகவும் விளங்கின.

பூமிக்குக் கீழே சூரிய ஒளி படராத பகுதியில் இந்த அதிசயங்களை எப்படி உருவாக்கினார்கள் என்று வியக்காமல் இருக்க முடியவில்லை. எல்லா இடங்களிலும் ஜிலுஜிலு வென்று சுகமான உப்புக் காற்று வீசியது. சிறிதும் வியர்க்கவில்லை. பூதாகாரமான மலைப் பாம்பின் வயிற்றில் புகுந்து போவது போல் சுரங்கத்துக்குள்ளே பாதை வளைந்து வளைந்து போய்க் கொண்டிருக்கிறது. நடுவே பிக்சர் போஸ்ட் கார்டோ கடிதமோ வாங்கி எழுதி நண்பர்களுக்கு அனுப்ப வசதியாக

உள்ளேயே ஒரு தபாலாபீஸ் வேறு உண்டு. அங்கங்கே உப்புப் பாறைகள் வெட்டிய பரப்புக்களில் ஆழமாகத் தேங்கிக் கிடக்கும் நில நீர்ப் பரப்பில் ஓரிடத்தில் படகுகள் செலுத்துவதற்குக்கூட ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இத்தகைய பெரிய ஏரிகள் இரண்டு மூன்று பூமிக்கு அடியில் சுரங்கத்துக்குள்ளேயே இருக்கின்றன.

இன்னும் மேலே சில பகுதிகளில் மிக உயரமான விதானத்துடன் மாடங்களும் தூண்களும் சித்திர வேலைப்பாடுகளுமாகக் குடைந்திருக்கிறார்கள். சர்ச்சில் ஒரே சமயத்தில் 800 பேரும் ஆடிட்டோரியத்தில் ஆயிரம் பேரும் அமர முடியும். மேலே அவ்வளவு பெரிய இடங்கள் இருப்பதை மேலிருந்து பார்க்கும்போது நம்பக்கூட முடியாது.

பல நூறு ஆண்டுகளாக இருக்கும் இந்த உப்புச் சுரங்கத்தில் ஒவ்வொரு தலைமுறையிலும் எப்படி எந்தெந்தக் கருவிகளால் உப்புப் பாறைகளை வெட்டி எடுத்தார்கள் என்பதை விளக்கும் பல பொருட்காட்சிகளைச் சுரங்கத்துக்குள்ளேயே முறையாகக் கால வரிசைப்படி வைத்திருக்கிறார்கள். உப்புக் கற்பாறைகள் போலவே சற்று ஒளி மிகுதியுடன் கிடைக்கும் வைரக் கற்கள், ஒளிப் படிவங்கள் (Crystal stones) எல்லாம் அடங்கிய மியூஸியம் ஒன்றும் உள்ளே இருக்கிறது. ஒவ்வொன்றாகப் பார்க்கப் பார்க்க உப்புச் சுரங்கம் உவகைச் சுரங்கமாக வளர்ந்து கொண்டே போகிறது.

அந்தச் சூழ்நிலையும் ஆரோக்கியமான காற்றும் ஆஸ்துமா நோயாளிகளை விரைந்து குணப்படுத்துகின்றன என்று கண்டுபிடித்திருக்கிறார்கள். கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு முதல் உள்ள இச் சுரங்கத்தில் ஆஸ்துமா சானடோரியம் பின் இணைந்தது. எல்லாவற்றையும் சுற்றிக் காட்டிய பின் எனக்குக் கல்கண்டு கட்டி போல் மின்னும் ஓர் உப்புப் பாறையைச் சிறிதாக உடைத்தெடுத்து அன்பளிப்பாகத் தந்தார் சுற்றிக் காட்டிய சுரங்க வழிகாட்டி.

'உப்பிட்டவரை உள்ளளவும் நினை' என்னும் தமிழ்ப் பழமொழியை நினைத்துக்கொண்டேன். உப்புச் சுரங்கம் உவகைச் சுரங்கமாக இனித்தது. க்ராக்கோவையும், அதைச் சுற்றிய பகுதிகளையும் போலந்தின் கலைச் சுரங்கம் என்றால், அவற்றுள் இந்த 'வியெலிச்கா உப்புச் சுரங்கம்' இரசனை உள்ளவர்களுக்கு ஒரு கற்கண்டுச் சுரங்கமாக இனிக்கிறது.

க்ராக்கோவையும், சுற்றுப்புறங்களையும் பார்த்தபோது, அங்குள்ள இசைக் கலைகள், இசைக் கருவிகளில் நம்முடைய பண்டைத் தமிழ் நாட்டுக்கும் போலந்துக்கும் சில ஒற்றுமைகள் இருப்பதைக் காண முடிந்தது. நான் கேட்ட சில நாட்டுப்புறப் பாடல்கள் கிராமியப் பாடல்கள் மதுரை, இராமநாதபுரம் சீமையின் நாட்டுப்புறப் பாடல்களின் அமைப்பையும், ஓசை நயத்தையும் நினைவூட்டின. சிலப்பதிகார அரங்கேற்றுக் காதையிலும், விபுலானந்தரின் யாழ் நூலிலும் குறிப்பிட்டாற் போன்ற அமைப்பு உடைய சில இசைக் கருவிகளையும் போலந்தில் பார்க்க முடிந்தது. நாடுகளுக்கு இடையே உள்ள தொலைவு, மொழி வேறுபாடு இவற்றை எல்லாம் கடந்து இப்படி அபூர்வமாக அமைந்துள்ள ஒற்றுமைகள் நம்மை ஆச்சரியத்தில் மூழ்கச் செய்து விடுகின்றன. போலிஷ் கட்டிடக் கலை அமைப்பிலும், மாளிகைகளிலும் கூடச் சில பகுதிகள் நம் செட்டிநாட்டு வீடுகள் போல் உள்ளன.

போலந்தின் தலைநகராகிய வார்ஸாவிலும் பிற நகரங்களிலும் உள்ள பழங்கால மாளிகைகள், அரண்மனைகளில் இப்படி ஒற்றுமையைக்காண முடிந்தது. உலகமெங்கும் மனிதகுலம் சில அடிப்படை ஒற்றுமைகளோடு தான் படிப்படியாக வளர்ந்துள்ளது என்ற பொதுக் கருத்தைத்தான் இந்த ஒற்றுமைகள் அவ்வப்போது நிரூபித்தன.

ஆயினும் நம்மோடு ஒப்பிட்டுக் கொள்ள முடியாத ஒரு வளர்ச்சியும் சிறப்பும் தனியாக அவர்களுக்கு இருந்ததையும் குறிப்பிட்டாக வேண்டும்! அதுதான் சுரங்கத் தொழிலில் (mining) பல நூற்றாண்டுகளாக அவர்கள் பெற்றிருக்கும் திறமை. அது பற்றி இனி மற்றொரு கட்டுரையில் பார்க்கலாம். (தொடரும்)

அட்டைப்பட விளக்கம்:

## சிறந்த கலைஞரின் சிறப்பு நிகழ்ச்சி

அரங்கேற்றம் நடந்தபோதே ஓஹோஹோ என்று புகழப்பட்டார் குமாரி லதா நீலகண்டன். ஒவ்வொரு வியப்பொலியும் அவர் கலை மேலும் பிரகாசிக்க உதவியிருக்கிறது.

பம்பாய் ராஜராஜேச்வரி பரதப் பள்ளியில் குரு மகாலிங்கம் பிள்ளையிடம் பயின்று பேரும் புகழும் பெற்றுள்ளவர் லதா. இவர் தகப்பனார் 'ஃபைஸர்' நீலகண்டன் கலை உலகில் பிரபலமானவர்.

இவர்களுடைய கலை ஆர்வம் பம்பாய் தமிழ்ச் சங்கத்தின் தமிழார்வத்துடன் இணைந்தபோது நூதனமானதும் பெருமிதம் கொள்ளக்கூடியதுமான ஒரு நிகழ்ச்சி உருவாயிற்று.

இந்த விசேஷ நடன நிகழ்ச்சியில் தமிழ்ப் பாடல்களே இடம் பெற்றன.

சண்முகானந்த சபா அரங்கில் குமாரி லதா ஆடியபோது கம்பனும் வள்ளுவனும் ஆண்டாளும் தேன் மதுரத் தமிழில் இயற்றிய பக்திச் சுவை ததும்பும் பாடல்களைக் கேட்டு ஆனந்திக்க முடிந்தது. அதே நேரத்தில் லதாவின் அழகிய தோற்றத்தில், குறுகுறுப்பான விழிகளில், நெஞ்சை அள்ளும் புன்னகையில் பாடலின் கருத்துக்களைப் பாவபூர்வமாகப் பார்த்தும் ரசிக்க முடிந்தது.

ஔவையார், முத்துத் தாண்டவர், ராமலிங்க சுவாமிகள், பாரதியார், பாபநாசம் சிவன் ஆகியோரது அருமையான பாடல்களுக்கும் அபிநயம் பிடித்தார் லதா.

தமிழ் என்றாலே இனிமை, தமிழிசை என்றால் அதனினும் இனிமை. இறையுணர்வுடன் கூடிய தமிழ், இசை இவற்றுடன் லதாவின் தேர்ந்த பாவ பூர்வமான நடனமும் சேர்ந்தால் அது அனைத்திலும் இனிமை அல்லவா? அவையோர் அகமகிழ்ந்து பரவசமானதில் வியப்பென்ன?

# அபூர்வ மருந்து...
# அறுவை சிகிச்சை இன்றியே மூலத்தைச் சுருக்க உதவுகிறது!

**நமைச்சலை நிறுத்துகிறது-நிமிடங்களில் வலியைப் போக்குகிறது!**

**நியூயார்க் :** இப்பொழுது விஞ்ஞானத்துறை ஒரு புதிய மருந்தைக் கண்டு பிடித்துள்ளது. பெரும்பான்மையான மூல நோயை அறுவை சிகிச்சை இன்றியே சுருக்க உதவுகிறது 'இந்த அபூர்வ மருந்து. டாக்டர்கள் நடத்திய பரிசோதனைகளின் நிரூபணம் இது! மூல நோயால் ஏற்படும் வலியும் நமைச்சலும் நீங்கி, அதிவிரைவில் மூலம் சுருங்கி குணமேற்பட்டிருக்கிறது. மூல நோயால் 10, 20 ஆண்டுகள் துன்புற்றோர் கூட, "மூல நோய் என்னும் பிரச்சினை முடிந்து விட்டது" என்று கூறுகிறார்கள்.

இத்தன்னிகரற்ற மருந்தான பிரிபரேஷன் எச்* களிம்பு, மூலத்தைச் சுருக்க உதவுவதோடு, நமைச்சலை நீக்கி வலியைத் தணிக்கிறது; மலப் போக்கின் போது வலியைக் குறைத்து எளிதாக்குகிறது.

பிரிபரேஷன் எச், இடும் குழாயுடன். 50 கிராம் அல்லது 30 கிராம் ட்யூபுகளை உங்கள் மருந்து வியாபாரியிடமிருந்து வாங்குங்கள்.

மூல நோய் பற்றிய விளக்கப் புத்தகமொன்றை இலவசமாகப் பெற, (25 பைசா தபால் தலையுடன்) எழுதுக இன்றே இம் முகவரிக்கு : டிபார்ட்மெண்ட் PH-66 த. பெ. எண் 10133, பம்பாய் 400 001

*Regd. User of TM : Geoffrey Manners & Co. Ltd.   744 PH-82 Tam

---

# மாயவரம் பைனான்ஷியல் கார்ப்பொரேஷன்
## லிமிடெட்

பதிவு அலுவலகம்: **13-H, கச்சேரி ரோடு, மாயவரம்-609001**

31-3-976 முடிய

| | |
|---|---|
| 1. அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 5 லட்சம் |
| 2. செலுத்தப்பட்ட மூலதனம் & ரிசர்வுகள் | ரூ. 5.5 லட்சம் |
| 3. நடைபெறும் சீட்டுகளின் மதிப்பு | ரூ. 8 கோடிக்கு மேல் |

**கிளை அலுவலகங்கள்**

மாயவரம், காரைக்கால், பாண்டிச்சேரி
திருப்பாப்புலியூர், கும்பகோணம், தஞ்சாவூர்
சிதம்பரம், சென்னை, காஞ்சீபுரம்

**"உயர்துகை ஏலச் சீட்டு நடத்துபவர்கள்."**

மாயவரம்
27-5-76

R. கல்யாணசுந்தரம்
மானேஜிங் டைரெக்டர்

# சேரமான் காதலி

## அத்தியாயம் 2

## தண்ணிலவும் தாரகையும்

மூடிசூட்டு விழாவையொட்டி அராபியர் தெருவும், யூதர்கள் தெருவும், சிரியன் கிறிஸ்துவர்கள் தெருவும் கூட அற்புதமாக அலங்கரிக்கப்பட்டிருந்தன.

ஒவ்வொரு தெருவுக்கும் அந்தந்த நாடுகளிலிருந்து புதிய வருகைகளும் இருந்தன.

பாரத கண்டத்திலேயே சேர நாட்டுத் துறைமுகமும், சோழநாட்டுப் பூம்புகாரும்தான் அதிகமாக வெளிநாட்டவரை இறக்குமதி செய்த துறைமுகங்களாகும்.

தெற்கே ஐரோப்பியர்களும் யவனர்களும் வருவதற்குப் பல நூற்றாண்டுக்கு முன்னமேயே மேற்குக் கடற்கரை அவர்களைச் சந்தித்து விட்டது.

ஒவ்வொரு தினங்களிலும் ஒவ்வொரு பாய்மரக் கப்பலாவது அரேபியாவில் இருந்து மேற்குக் கடற்கரைக்கு வந்து கொண்டிருந்தது.

ஏற்கனவே குடிபெயர்ந்து வந்தவர்களின் உறவினர்கள் தாங்களும் வாணிப நிமித்தம் அங்கே வருவது பழக்கமாயிருந்தது.

அப்படி வந்தவர்களில் மூவர்தான், மகமதுவும், அவரது பேகமும், சலீமாவும்.

மகமதுவின் சகோதரி பாத்திமாவும் அவளது கணவன் அகமதுவும் இவர்கள் வருகைக்கு மூன்றாண்டுகளுக்கு முன்பே வஞ்சியில் குடியேறியிருந்தனர்.

அவர்களது ஆதரவில் வாணிபம் செய்யக் கருதியே மகமது தன் குடும்பத்தோடு வந்திருந்தார்.

சுமார் அறுபது பேர்கள் வந்த அந்தக் கப்பலில் விலை உயர்ந்த வாணிபப் பொருளைக் கொண்டு வந்திருந்தவர்கள் அவர்களே.

அந்நாளில் சேர நாட்டுக்குச் சுங்கச் சாவடிகள் கிடையாது. வெளியில் இருந்து வரும் பொருள்கள் தாராளமாக அனுமதிக்கப்பட்டன.

வஞ்சியில் இருந்து வெளியே செல்லவும் அனுமதி தேவையில்லாமல் இருந்தது.

ஓரளவுக்குச் சுதந்திரத் துறைமுகமாகவே மேற்குத் துறைமுகம் காட்சி அளித்தது.

பாய்மரக் கப்பலைவிட்டு இறங்கிய மகமதுவும், குடும்பத்தினரும் தங்களை எதிர்கொண்டு அழைக்கும் வீரர்களைப் பார்த்ததும் முதலில் சற்றுத் திகைத்தாலும் திசை தப்பிய கப்பலுக்குத் திசை காட்டித் தைரியம் ஊட்ட நியமிக்கப்பட்டிருக்கும் அரசாங்க வீரர்கள் என்று தெரியவந்ததும் தைரியமடைந்தனர். தாங்கள் வந்த கப்பல் திசை தப்பினாலும், தாங்கள் வந்து சேர வேண்டிய கேரள மண்ணில் ஊர்ந்து நின்று விட்டிருக்கிறது என்பதை அறிந்ததும் அல்லாவின் அருளை எண்ணி வியந்து மெய்சிலிர்த்துத் தொழுதனர். வீரர்கள் அவர்களுக்கு நகர்ப்புற எல்லை வரையில் துணைபோயினர்.

நகர்ப்புறத்துக்கு வெகு தூரத்துக்கு வெகு தூரத்தில் பாய்மரக் கப்பல் நின்று விட்டபடியால், நகரத்தின் அப்புறத்தில் உள்ள அராபியத் தெருவில் குடியிருக்கும் மகம்மதுவின் சகோதரி பாத்திமாவின் இல்லத்தைத் தேடி வெகு நேரம் அலைய வேண்டியிருந்தது.

பாஸ்கர ரவிவர்மன் என்ற மூன்றாம் சேரமான் பெருமானின் புதிய தளபதிகளில் ஒருவனான மாணிக்கன் சில படை வீரர்களோடு புரவியேறி வந்தவன் அல்லங்காடியில் அவர்களைச் சந்தித்தான்.

அராபியர் தெருவுக்கு, அவர்களுக்கு அவனே வழிகாட்டினான்.

அந்த இரவில் வழியெங்கும் விசாரித்துக் கொண்டு பாத்திமாவின் இல்

கண்ணதாசன்

லத்தை வந்து அடைந்தார்கள் மகமது வும், குடும்பத்தினரும்.

கதவைத் தாழிட்டுவிட்டு உள்ளே தூங்கிக் கொண்டிருந்த அகமது கதவு தட்டும் சத்தம் கேட்டு எழுந்து கத வைத் திறந்தார்.

மைத்துனரைக் கண்டதும் மட்டற்ற மகிழ்ச்சி பொங்கப் பாத்திமாவை எழுப்பினர்.

அந்த இல்லத்திலேயே அகமதுவின் குடும்பத்தினரோடு வேறு இருவரும் தங்கி யிருந்தார்கள்.

அராபியாவில் ஆதரவில்லாமல் சேர நாட்டுக்கு வந்து அவர்களோடு தங்கிய இருவரும் உடன் பிறந்தவர்கள். சகோ தரன் யூசுப்; சகோதரி ஜெபுன்னிஸா. அவர்களும் எழுந்து ஓடி வந்தார்கள்.

மங்கலாக எரிந்து கொண்டிருந்த விளக்கைத் தூண்டிவிட்டார் அகமது.

தாயகத்தில் இருக்கும்போது தங்க ளோடு சண்டை இட்டவர்கள்கூட, வேற்றகத்தில் குடி புகும்போது பாசப் பிணைப்பில் கட்டுண்டு கிடப்பார்கள்.

அந்த நேரத்திலும் விருந்து படைத் தாள் அன்புத் தேவதை பாத்திமா. அவளோடு ஒத்துழைத்தாள் மகமதுவின் பேகம்.

அராபியாவில் உள்ள உறவினர்கள் பற்றி அகமது பேகம் விசாரிக்க, சேர நாட்டு வாழ்க்கை பற்றி மகமதுவின் பேகம் விசாரிக்க ஒருவருக்கொருவர் சுவையான விஷயங்களைப் பரிமாறிக் கொண்டு சமையலில் ஈடுபட்டார்கள்.

ஜெபுன்னிஸாவும், சலீமாவும் நிலா முற்றத்தில் சென்று அமர்ந்தார்கள்.

அகமதுவும், மகமதுவும் வாணிபக் கதைகளைப் பேசிக் கொண்டு வாணி பப் பொருட்களைப் பிரித்து வைக்கத் தலைப்பட்டார்கள்.

மூன்று இடங்களுக்கும் ஓடோடிச் சென்று உதவி செய்வதில் ஈடுபட் டான் யூசுப்.

நிலா வெளிச்சத்தில் சலீமா வையே கூர்ந்து நோக்கினள், ஜெபுன்னிஸா.

சலீமா !

அங்கமெலாம் தங்க நிறம். வண்ண நிலவொளி அவள் கன்ன மெனும் கிண்ணத்தில் விழுந்த போது தன்னையும் அறியாமல் தோல்வியை ஒப்புக் கொண்டது.

தாழம்பூவில் இழை எடுத்து, கருஞ்சாந்து பூசி, சரம் சரமாய்த் தொங்கவிட்டது போன்ற அழ கான கூந்தல்.

ஏழு கடல்தேடி எடுத்து வந்த சிப்பி களில் கோல மெருகிட்டுக் கொஞ்சி வர விட்டது போல், சின்னஞ் சிறகெடுத்துச் சிங்காரக் கலை காட்டும் வண்ண இமை இரண்டு.

'அதை மூடி வைத்தால் ஊரடங் கும்; இறந்து வைத்தால் உலகடங்கும்' என்பது போல், பளிச்சென்று மின்னும் கண்ணிரண்டு.

சின்னஞ் சிறிய சங்குகளில் கருந் திராக்ஷைகளை வைத்தது போல், மின்னி மின்னி எழில் காட்டும் அந்தக் கண்களில் தன்னையே பறி கொடுத்தாள் ஜெபுன்னிஸா.

சலீமா, பெண்ணுக்குப் பெண் ஆசை கொள்ளும் வண்ண மயில் பேடு.

சந்திரனின் சாறெடுத்த சந்தனக்கூடு.

செம்பவழ இதழ் இரண்டும் தேன் வடிக்கும் கோடு.



திரண்டெழுந்த மேலழகோ மரகதப் பூமேடு.

மேல் பாதி கீழ் பாதி பிரித்தெடுக்கும் இடையாள்.

விண்மீன்கள் அணிவகுத்துப் பண் இசைக்கும் நகையாள்.

விரல் அழகில் பூமியையே விலை பேசும் மலர்கள்.

மெல்லியதோர் பொன்னடியில் தென்றலுக்கும் இளையாள்.

பஞ்ச வர்ணக் கிளியொன்று பருவ நிலை யெய்தி, பட்டாடை கட்டி வந்த பாவனையில் இருந்தாள்.

கழுத்து முதல் கால் வரையில் ஒருடைதான் அணிந்தாள்.

கனகமணிச் சரம் ஒன்றைக் கழுத்தோடு கலந்தாள்.

உலகிலுள்ள அழகெல்லாம் ஒரு வடிவமான, உற்சவத்துச் சிலை போல் உட்கார்ந்திருந்தாள்.



பராசிகக் கவிஞனுக்குப் பசியெடுக்கும் விருந்து; பார்ப்பவர் கண்களுக்கு நோய் கொடுக்கும் மருந்து.

—அந்த அராபியச் சிலை அமர்ந்திருந்த பாவனையைப் பார்த்தபடியே நிலவு மெல்ல நகர்ந்து கொண்டிருந்தது.

தாங்கள் நாடு விட்டு வந்த காரணத்தை அவள் ஜெபுன்னிஸாவுக்கு விளக்கினாள்.

அராபியப் பொருள்களுக்கு அராபியச் சந்தையில் விற்பனை குறைந்துவிட்டதாகவும், சேரநாட்டு வாணிபத்தைத் தேடி வந்ததாகவும் கூறினாள்.

சேரநாட்டு இளங்காற்று அவள் கூந்தலைத் தாலாட்டியது.

"இந்தக் காற்று எனக்கு மிகவும் பிடிக்கிறது. இந்த நாடு எப்படி?" என்று கேட்டாள் சலீமா.

தான் அறிந்திருந்த சரித்திரத்தைத் தாளத்தோடு ஒப்புவித்தாள், ஜெபுன்னிஸா.

"மன்னவர் மூன்றும் சேரமான் பெருமாள் முடிசூட்டு விழா சமீபத்தில் தான் நடந்தது. இரண்டாம் சேரமானின் குமாரர் மார்த்தாண்டவர்மரின் முடிசூட்டு விழா திருவிதாங்கோட்டில் இன்றுதான் நடந்தது. சேரநாடு இரண்டாகிவிட்டது. திருவிதாங்கோடு சிறிய நாடுதான். ஆனால் அழகு மிகுந்தது. வஞ்சிக்கு நீங்கள் இரவு நேரத்தில் வந்திருக்கிறீர்கள். காலை நேரத்தில் இதன் அழகைப் பார்க்க வேண்டும். கதிரவன் மலையிலே உதித்துக் கடலிலே மறையும் நாடு இது. கடலில் குளித்த சூரியன் கொதிப்பு மாறிக் குளிரடைந்து இரவு நேரத்தில் சந்திரனாக வருகிறான். நமது நாட்டைப் போலவே இங்கு எல்லாப் பெண்களும் அழகாக இருக்கிறார்கள்."

—ஜெபுன்னிஸா சொல்லச் சொல்ல அந்தச் சின்னக் கிளி அதை வேடிக்கையாகக் கேட்டுக் கொண்டிருந்தது.

பதினாறே வயது நிரம்பிய அந்தப் பருவக் கொடி உலக விவகாரங்கள் எதையும் அறியாது, தாய் தந்தையையே வணங்கும் பண்புடையாள். ஒருவயிற்றில் பிறந்த ஒரே மாணிக்கம்.

சேரநாட்டுச் சம்பிரதாயங்கள் அவளுக்குத்தெரிந்திருக்க நியாயமில்லை. ஜெபுன்னிஸா அதை விளக்கினாள்.

"வஞ்சிக்கு வரும் வெளிநாட்டு வணிகர்கள் மன்னரைப் பார்த்துப் பொக்கிஷத்துக்கு ஒரு சிறிய காணிக்கை

செலுத்த வேண்டும். ஒரு குடும்பத்தில் மூன்று பேர் இருந்தால் அந்த மூன்று பேருமே காணிக்கை செலுத்த வேண்டும். காணிக்கை செலுத்துவோருக்குச் சேர நாட்டு இலச்சினை பொறித்த ஒரு மோதிரத்தை அரசர் அளிப்பார். இந்த நாட்டுக் குடிமக்களாக அவர்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டதற்கு அதுவே அடையாளம். இப்போது மன்னவர் திருவிதாங்கோட்டில் இருக்கிறார். நாளை மறுநாள் அவர் வஞ்சிக்கு வரக்கூடும். வந்ததும் அகமது பாவா உங்களை அழைத்துக் கொண்டு அவரிடம் செல்லக் கூடும்'' என்றாள் ஜெபுன்னிஸா.

''சிலரை அங்கீகரிக்க மறுப்பதும் உண்டா?'' என்று கேட்டாள் சலீமா.

''சந்தேகத்துக்கு இடமானவர்கள் என்று ஒற்றர்களால் அங்கீகரிக்கப் பட்டவர்கள் மட்டுமே அங்கீகரிக்கப் படுவதில்லை. அப்படிப்பட்டவர்களை நகருக்குள் உலாவ விடுவதும் இல்லை. அடுத்த கப்பல் வரும் வரை துறைமுகத்துக்கு அருகில் உள்ள காவல் விடுதியில் வைத்துவிடுவார்கள். சாதாரணமாக இது அதிக அளவில் இருப்பதில்லை.''

''நமது பெண்களிடம் இந்த நாட்டுக்காரர்கள் தவருக நடந்து கொள்ள மாட்டார்களே....!'' என்று கேட்டாள், சலீமா.

''இல்லை. அப்படி ஒரு நிகழ்ச்சிகூட இதுவரையில் நடந்ததில்லை. யூதப் பெண்கள் மட்டுமேதான் எல்லோரிடமும் சகஜமாகப் பழகுகிறார்கள். நமது பெண்கள் அப்படிப் பழகுவதும் இல்லை; சேரநாட்டு வீரர்கள் தவறு செய்வதும் இல்லை'' என்றாள் ஜெபுன்னிஸா.

சலீமா ஒரு பெருமூச்சுவிட்டாள்.

''எதற்கும் நீ வெளியில் செல்லும் போது கறுப்புத் துணியால் கண்களுக்குக் கீழே மறைத்துக் கொண்டு போ. கல்லுக்குக்கூட உன்னைக் கண்டால் ஆசை வந்துவிடும்'' என்று சிரித்தாள் ஜெபுன்னிஸா.

''நம் நாட்டில்கூட சேரநாட்டு மன்னர்களைப் பற்றி நல்லவிதமாகத்தான் சொல்கிறார்கள். அதனால்தான் என் பெற்றோர் என்னையும் தைரியமாக அழைத்து வந்தார்கள்!'' என்றாள், சலீமா.

''மன்னருக்கு யூதப் பெண் ஒருத்தி காதலியாக இருக்கிறாள். அது மிகவும் ரகசியம். அந்தக் காதலுக்குக்கூட அவள்தான் முதல் காரணம். மன்னர் அவளை மனைவியாகவே ஆக்கிக் கொண்டு விட்டார்!'' என்றாள் ஜெபுன்னிஸா.

''அவள் எப்படி இருப்பாள்?'' என்று கேட்டாள் சலீமா.

''உன் கால் விரல்களைப் போல் இருப்பாள்!'' என்றாள், ஜெபுன்னிஸா.

''மன்னரின் பட்டத்து ராணி....!'' என்று இழுத்தாள் சலீமா.

''மகாராணி பத்மாவதி. இந்துப் பெண்களுக்கு அவள் ஓர் இலக்கணம். அவர்கள் எல்லாரும் நெற்றியில் குங்குமம் என்று ஒன்று வைக்கிறார்கள். அது அவர்கள் நெற்றிக்கு எவ்வளவு அழகாக இருக்கிறது, தெரியுமா?''

''நீ ஏதாவது இந்து திருமணத்துக்குப் போயிருக்கிறாயா?''

''ஓ, நிறைய. மாதவி என்று எனக்கொரு தோழி. அவளது திருமணத்தில் ஒரு நாள் முழுவதும் நான் அங்கே இருந்தேன். அவள் கொண்டையிட்டு அதிலே பூவைச் சுற்றி வைத்துக் கொண்டாள். நெற்றி வகிட்டிலேயும் அந்தக் குங்குமத்தை வைத்திருந்தாள். சங்கு, சக்கரம் போட்ட சங்கிலி ஒன்றைக் கட்டியிருந்தாள். ஆனால் அவர்கள் திருமணத்தில் நிறையச் சடங்குகள். எல்லாவற்றுக்கும் அர்த்தம் கூறுகிறார்கள்.''

இப்படி நேரம் போவது தெரியாமலேயே நிலா முற்றத்தில் சலீமாவும், ஜெபுன்னிஸாவும் பேசிக் கொண்டிருந்த போது யூசுப் உள்ளே நுழைந்தான்.

''உணவு தயாராக இருக்கிறது. உங்களைக் கூப்பிடுகிறார்கள்'' என்றான்.

''எனக்குப் பசியே இல்லை. பாய்மரக் கப்பல் ஆடிய ஆட்டத்தில் பல முறை வாந்தி எடுத்து விட்டேன்'' என்றாள் சலீமா.

''இல்லை. நீ சாப்பிடத்தான் வேண்டும். உணவு உன் கழுத்துக்குள் இறங்குவதை நான் பார்க்க வேண்டும்!'' என்றாள், ஜெபுன்னிஸா.

''என் கழுத்தென்ன கண்ணாடியா?'' என்று சிரித்தாள் சலீமா.

''உன் கழுத்தைப் பார்த்துத்தானே கண்ணாடியே செய்திருக்கிறார்கள்!'' என்றாள் ஜெபுன்னிஸா.

இருவரும் சிரித்துக் கொண்டே கீழே வந்தார்கள்.

ஒரு சலவைக் கல் மேடையைச் சுற்றிலும் ஏழு கருங்கல் நாற்காலிகள் போடப்பட்டிருந்தன.

ஒரு நாட்டு உணவைப் பிற நாட்டில் தயார் செய்யும்போது அதன் சுவையே தனி. அவர்கள் பேசிக் கொண்டே உணவருந்தினார்கள்.

பேச்சுவாக்கில், ''நாளை மறுநாள் நாம் மன்னரைச் சந்திக்கப் போகிறோம்'' என்றார் அகமது.

அப்போது அதைச் சாதாரணமாகத்தான் கேட்டாள் சலீமா. (தொடரும்)

# தலைநகரில் ராஜாஜி சிலை

**(12-8-1976 முதல் 23-8-1976 வரை நிதி வழங்கியவர் பட்டியல்)**

| | | |
|---|---|---|
| லட்சுமிபுரம் பக்தர், ஒருவர் | 51 | 00 |
| வீணை எஸ். பாலசந்தர், சென்னை | 100 | 00 |
| ஆர். வெங்கட்ராமன், ஆர்வீகோ | 400 | 00 |
| வி. ச. வாசுதேவன், பம்மல் | 5 | 00 |
| ஜி. வெங்கடசுப்பிரமணியம், தில்லி | 51 | 00 |
| சுந்தா, சென்னை | 50 | 00 |
| பி. எஸ். கீதா, சென்னை | 5 | 00 |
| பி. எஸ். ராஜேஸ்வரி, சென்னை | 5 | 00 |
| வி. கே. வீரராகவன், கல்கி ஏஜண்டு காஞ்சீபுரம் | 10 | 00 |
| வி. ஏகாம்பர அய்யர், சென்னை | 10 | 00 |
| வி. முத்துகிருஷ்ணன், திருவேட்டீசுவரன்பேட்டை | 6 | 00 |
| தியாகி எம். ரங்கசாமிநாயுடு, சென்னை | 10 | 00 |
| கே. ஏ. நடேசன், கல்பட்டு | 9 | 00 |
| வி. எஸ். சேஷாத்ரி, ஸ்ரீரங்கம் | 10 | 00 |
| டி. பிச்சை செட்டியார், மதுரை | 20 | 00 |
| என். முருகேசன், அரியலூர் | 5 | 00 |
| ஸ்ரீமதி ஜெயம்மாள் மாதவாச்சாரி சங்கர் நகர் | 25 | 00 |
| எம். எஸ். பி. சுப்பையா, திருச்சி | 5 | 00 |
| ஏ. கே. கிருஷ்ணமூர்த்தி, திருச்சி | 5 | 00 |
| என். ஆர். அகண்டேஸ்வர், திருச்சி | 20 | 00 |
| ஆர். பி. ஜி. வி. ராமசாமி செட்டியார், சித்தோடு | 10 | 00 |
| கே. ஆர். கல்யாணராமன், ராணிப்பேட்டை | 11 | 00 |
| ஜி. மோகன், ஈரோடு | 5 | 00 |
| வி. எஸ். சுந்தரராஜன், விஜயவாடா | 19 | 00 |
| கவர்னர் ஆலோசகர் பி. கே. தவே, சென்னை | 51 | 00 |
| ஸ்ரீமதி ராஜகோபால், மயிலாப்பூர் | 100 | 00 |
| பி. டி. சுப்பராஜா, ராஜபாளையம் | 161 | 00 |
| ஜி. லக்ஷ்மிபிரஸாத், காரைக்குடி | 5 | 00 |
| கே. தொரையன், கோவை | 10 | 00 |
| ஆர். எம். சுந்தரம், புதுதில்லி | 5 | 00 |
| என். சுந்தரபாலு, மதுரை | 51 | 00 |
| எஸ். நெல்லையப்பன், கல்லிடைக்குறிச்சி | 5 | 00 |
| பாரத் ஜாப் டைப் ஆஃபீஸ், ராசிபுரம் | 5 | 00 |
| வி. லக்ஷ்மிநாராயணன், வடலூர் | 5 | 00 |
| ஸ்ரீமதி எஸ். ராஜலக்ஷ்மி, சென்னை | 5 | 00 |
| ஆர். பட்டாபிராமன், சேலம் | 10 | 00 |
| ஏ. குமாரஸ்வாமி, மயிலாப்பூர் | 45 | 00 |
| எஸ். ஸ்ரீநிவாச ஐயர், சைதை | 5 | 00 |
| ஆர். சி. பழநியப்பன், சென்னை | 10 | 00 |
| பி. காத்தான், கல்கி ஏஜண்டு மகாதானபுரம் | 5 | 00 |
| எஸ். ஆனந்த், கோமியா | 5 | 00 |
| டி. சுவாமிநாதன், மேற்கு மாம்பலம் | 10 | 00 |
| கே. சி. அனந்தகிருஷ்ணன், கோயமுத்தூர் | 5 | 00 |
| பி. ஆர். சுப்பிரமணியன், கும்பகோணம் | 5 | 00 |
| எம். எஸ். மாதவன், — எம். எஸ். பத்மப்ரியா, பம்பாய் | 5 | 00 |
| பி. செல்லப்பா, பம்பாய் | 5 | 00 |
| டி. ஆர். வி. ராமன், பம்பாய் | 5 | 00 |
| வி. மாணிக்கம், கொச்சி | 5 | 00 |
| கே. சேஷாத்ரி, கொச்சி | 5 | 00 |
| எச். ராமசாமி செட்டியார், தர்மபுரி | 5 | 00 |
| இ. செ. பழநிவேலு, நாமகிரிப்பேட்டை | 10 | 00 |
| பி. எஸ். ராஜன், சேலம் | 10 | 00 |
| வி. சீதாராமன், மயிலாப்பூர் | 5 | 00 |
| ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி - கல்யாணராமன் திருவொற்றியூர் | 5 | 00 |
| வி. வெங்கட்ராமன், எமரால்டு | 5 | 00 |
| ஆர். சேகர், ஈரோடு | 8 | 00 |
| ஏ. சம்பத்நரசிம்மன், கல்கி ஏஜண்டு, ராணிப்பேட்டை | 51 | 00 |
| தீனபந்து ஆசிரமம், வாலாஜாபேட்டை | 10 | 00 |
| ராஜாஜி மகளிர் விடுதி வாலாஜாபேட்டை | 10 | 00 |
| சங்கீத வித்வான இ. லக்ஷ்மீநரஸிம்ஹ அய்யங்கார், பழங்காநத்தம் | 5 | 00 |
| எஸ். ரங்கநாதன், திருவனந்தபுரம் | 5 | 00 |
| புஷ்பவல்லி ,, | 5 | 00 |
| எஸ். சேஷாசலம் ,, | 5 | 00 |
| கவிதா ,, | 5 | 00 |
| எஸ். சுப்பிரமணி ,, | 5 | 00 |
| ஜெயந்தி ,, | 5 | 00 |
| டபிள்யூ. எஸ். ராமானுஜன் புதுச்சேரி | 10 | 00 |
| கே. சுந்தரராமன், கே. சிவகுமார், கே. கணேஷ், பெங்களூர் | [illegible] | 00 |
| மொத்தம் ரூ. | 1549 | 00 |



**RAJAJI STATUE FOR NEW DELHI**

Benefit music concert by

**M. S. SUBBULAKSHMI**

Accompanied by Radha Viswanathan

K. S. Alagarsamy, T. K. Murthy, Shyam Sunder

**on GANDHI JAYANTI DAY - 2nd October, 1976, 6-30 p.m.**

at KAMANI HALL, Lytton Road, New Delhi

Tickets: Rs. 100, 50, 25, 10 & 5

Please buy your tickets in advance and hasten to contribute your mite for the Statue of Poojya Rajaji to be installed in the capital of the country.


Luxe
COLD WAX
HAIR REMOVER

★ I Confess என்ற ஆங்கிலப் படத்தில் குற்றவாளியை ஆரம்பத்திலேயே அறிமுகப் படுத்தி விறுவிறுப்புடன் கதையை இயக்கிய ஆங்கில டைரக்டரை எண்ணி வியந்ததுண்டு.

இருபது வருடங்களுக்கு முன்பு எந்த ஆவலுடன் முடிவு தெரியாத குறுகுறுப்புடன் பார்த்திபன் கனவைப் படித்தேனோ அதே கவையுடன் விறுவிறுப்புடன் ஆவலாய் இந்த இதழில் முடிவு தெரிந்த பார்த்திபன் கனவைப் படித்தேன். உயிருள்ள எழுத்து இதுதான் என்றால் இரண்டு அபிப்பிராயங்கள் சாத்தியமோ?

திருச்சி—4
6—8—76 என். பாலு

★ "புது உலகம் கண்டேன்" கட்டுரையில் "இரஷ்யாவில் திருட்டு என்றே பேச்சே கிடையாது. பாங்க் கொள்ளை, கடைக் கொள்ளை, பிக்பாக்கெட், வழிப்பறி இவை யெல்லாவற்றையும் பற்றி எச்சரிக்க வேண்டிய அவசியமே ரஷ்யாவில் இல்லை." என்கிற நா. பா.வின் வரிகளைப் படித்த போது

"கள்வர் இலாமைப் பொருள் காவலும்
இல்லை; யாதும்
கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும்
இல்லை மாதோ"

என்ற கம்பன் கண்ட அயோத்திதான் எனது நினைவுக்கு வந்தது.

முண்டியம்பாக்கம்
16—8—76 எஸ். குமரவேல்

★ 'புது உலகம் கண்டேன்' 8—8—76ம் இதழில் Short Circuit Television Camera (ஷார்ட் சர்க்யூட் டெலிவிஷன் காமிரா) என்று குறிப்பிட்டிருப்பது தவறு. Closed circuit Television Camera) (க்ளோஸ்ட் சர்க்யூட் டெலிவிஷன் காமிரா) என்று இருக்க வேண்டும்.

சென்னை—40
12—8—76 எஸ். சுவாமிநாதன்

★ முதல் பக்கத்தில் புதிர் போடுவதுதான் போடுகிறீர்கள்; அதன் அடியிலேயே விடையையும் கொடுத்துவிடுவதால், விடையைப் பற்றிச் சிந்திக்கவே தோன்றாமல், அடுத்த கணமே தலைகீழாகத் திருப்பி விடையையும் படித்துவிடத் தூண்டுகிறீர்களே? விடையை வேறு ஏதேனும் ஒரு பக்கத்தில் பிரசுரித்தால் அதைத் திருப்பும் முன்னர் கொஞ்சம் சிந்திக்கலாம் என்று தோன்றும் அல்லவா ?

திருச்சி — 20
14—8—76 ஷேக் சிந்தா மதார்

★ திருச்சிராப்பள்ளியில் நாற்பத்தெட்டு லட்ச ரூபாய் செலவிட்டு ஒரு கலையரங்கத்தை முன்னைய ஆட்சியில் 97 பங்கு கட்டி, இன்னும் முடிவடையாமலும், வருமானம் இல்லாமலும், பயன்படாமலும் இருந்து வருகிறது. இப்பணியை உடனே தொடர்ந்து நடத்தி, முடித்துத் திருச்சி நகர மக்களுக்குப் பயன்படச் செய்ய விரைந்த நடவடிக்கைகள் தேவை.

திருச்சிராப்பள்ளியில் மூன்று நதிகள் ஓடிக்கொண்டிருந்தும் நகர மக்களுக்குக் குடிநீர்ப் பஞ்சம் இருந்து வருவது வருந்தத் தக்கது. இக்குறையைப் போக்க நகராட்சி வகுத்திருக்கும் திட்டத்துக்கு அரசினரிடமிருந்து பொருளுதவி உடனே தேவை.

திருச்சிராப்பள்ளியில் ஒரு பல்கலைக் கழகம் அமைக்க எல்லாத் திட்டங்களும் வகுத்தும் அனைத்து வேலைகளும் நடந்தும் இப்போது அது தடைப்பட்டு நிற்கிறது. அப்பணி விரைந்து நடைபெற அரசின் ஆணை தேவை.

திருச்சிராப்பள்ளியில் நடைபெற்று வந்த சவுத் மதராஸ் எலெக்ட்ரிக் கார்ப்பொரேஷனை ஆட்சி எடுத்துக் கொண்டு அதற்குக் கொடுக்க வேண்டிய நட்டஈட்டுத் தொகை ரூ. இரண்டு கோடியே பதினைந்து லட்சமும் இரண்டரை ஆண்டுகளாகியும் இன்னும் கிடைக்கவில்லை. ஐந்தாண்டுகளுக்கு முன்பு அரசு எடுத்துக் கொண்ட கீழ் தஞ்சை, மாயூரம், மன்னார்குடி எலெக்ட்ரிக் கார்ப்பொரேஷனுக்கு இன்னும் ஒரு கோடி ரூபாய் வரை கிடைக்கவில்லை.

இதனால் இக்கார்ப்பொரேஷனின் பங்குதாரர்களான நூற்றுக்கு எண்பத்தைந்து விதமுள்ள ஏழை மக்கள் பங்குத் தொகையும் கிடைக்காமல், லாபமும் கிடைக்காமல், வட்டியும் கிடைக்காமல் வருந்திக் கொண்டிருக்கின்றனர். துயர் போக்க ஆளுநர் அவர்களின் கவனமும் முயற்சியும் அவசரமாகத் தேவை.




திருச்சிராப்பள்ளி — 8
11—8—76 கி.ஆ.பெ. விசுவநாதம்

★ சென்னை நகரின் எல்லாப் பகுதிகளிலும் மலேரியா ஜுரம் வேகமாகப் பரவி வருவதாகவும், சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் கடந்த மூன்று மாதங்களில் ஐந்நூற்றுக்கு மேற்பட்ட ஆண்களும், எண்ணூறுக்கு மேற்பட்ட பெண்களும் தங்கிச் சிகிச்சை பெற்றிருக்கிறார்கள் என்றும் மருத்துவ அதிகாரிகள் கூறியிருக்கிறார்கள்.

அறிக்கைவிட்டு அறிவுரை சொல்வதைவிட நோய் வராமல் தடுப்பதற்கு முயற்சி எடுத்துக் கொள்வது அதிகாரிகளின் கடமை ஆகும்.

நீர் தேங்குமிடங்களில் கொசு ஒழிக்கும் மருந்து அடிப்பதைத் தீவிரப்படுத்துவதுடன் நீர் தேங்காமல் இருக்க இயன்ற முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். நகர எல்லைக்குள் மாடுகள், பன்றிகள் வளர்ப்பதற்குத் தடை விதிக்க வேண்டும்.

சென்னை டி. என். சிவதாணு
10—8—76 தலைவர், இந்திய உபயோகிப்பாளர் கூட்டமைப்பு

# "20 அம்சம் தந்த புதிய சமுதாயம்"

## எனும் 20-அம்ச திட்டத்தைப்பற்றிய திரைப் படத்தைப் பார்த்தீர்களா?

# ஐஓபி திரைப்பட மதிப்புரைப் போட்டியில் பங்கு பெறுங்கள்

ஒரு
முதல் பரிசு
ரூ.2000

இரண்டு
இரண்டாவது பரிசுகள்
தலா
ரூ.1000

மூன்று
மூன்றாவது பரிசுகள்
தலா
ரூ.500

மேலும்
25 தகுதிப் பரிசுகள்
ரூ.100

### பங்கு பெறுவது எளிது

ஐஓபியில் ஏதாவது ஒரு வகை டிபாஸிட் கணக்கு வைத்திருப்பவர்கள் இப்போட்டியில் பங்கு கொள்ளத் தகுதியுள்ளவராவர். உங்கள் பெயரில் ஒரு கணக்கு இல்லாவிட்டால் உடனே அருகிலுள்ள ஐஓபி கிளையில் டிபாஸிட் கணக்கு ஒன்று துவக்குங்கள். தமிழ் நாட்டிலுள்ள திரையரங்குகள் அனைத்திலும் காண்பிக்கப்படுகின்ற இத்திரைப்படத்தைப் பாருங்கள். அதன் மையக் கருத்து எவ்வாறு திரையில் படைக்கப்படுகிறதென்பதைப்பற்றி உங்கள் கருத்துக்களை 100 சொற்களுக்கு மிகாமல் எழுதி உங்கள் மதிப்புரையைக் கீழே குறிப்பிட்ட முகவரிக்கு அனுப்புங்கள். ஒருவர் ஒரு முறைதான் பங்கேற்க அனுமதியுண்டு.

மிகச் சிறந்த 31 மதிப்புரைகளைச் சுயேச்சையான நீதிபதிகள் அடங்கிய குழு ஒன்று தேர்ந்தெடுக்கும். தகுதிக்கு ஏற்றவாறு பரிசுகள் வழங்கப்படும்.

## போட்டியின் நிபந்தனைகள்

1. இந்தியாவில் எந்த ஒரு ஐஓபி கிளையிலாவது டிபாஸிட் கணக்குகள் வைத்திருக்கும் யாவரும் இப்போட்டியில் பங்கு பெறலாம். கூட்டுக் கணக்கு வைத்திருப்பவர்களானால் ஒருவர்தான் பங்கு பெற அனுமதியுண்டு.

2. ஒருவர் ஒரு முறைதான் நுழைவுச்சீட்டு அனுப்பலாம்.

3. மதிப்புரைகள் ஆங்கிலத்திலோ, அல்லது தமிழிலோ எழுதப்பட்டு

(அ) அனுப்புவோரின் பெயர் மற்றும் முகவரி (ஆ) ஐஓபியில் வைத்திருக்கும் கணக்கின் வகை மற்றும் எண். (இ) கணக்கு செயல்படும் ஐஓபி கிளையின் பெயர் ஆகியவற்றுடன் சேர்த்து அனுப்பப்பட வேண்டும்.

4. பென்சிலினால் எழுதப்பட்ட, அழித்துத் திருத்திய அடையாளங் கொண்ட, தெளிவற்ற, தபால் தலைகள் இல்லாத மற்றும் போதிய தபால் தலைகள் இல்லாத மதிப்புரைகள் ஏற்றுக் கொள்ளப்படமாட்டா.

5. தாமதமாக வந்த அல்லது தபாலில் காணமற்போன நுழைவுத் தாள்களுக்கு ஐஓபி பொறுப்பல்ல.

6. எல்லா நுழைவுத்தாள்களும் ஐஓபி திரைப்பட மதிப்புரைப் போட்டி, தபால் பெட்டி எண் 506 சென்னை-600 008 என்ற முகவரிக்கு அக்டோபர் 31, 1976 அன்று பகல் 12 மணிக்குள் அல்லது முன்னதாக எங்களுக்குக் கிடைக்கும்படி அனுப்பவேண்டும். தவறினால் அவை ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா. வேறு முகவரிகளுக்கு அனுப்பிய நுழைவுத் தாள்களும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டா.

7. நீதிபதிகளடங்கிய குழுவினால் நுழைவுகளின் தகுதிக்கேற்ப மதிப்புகள் வழங்கப்படும். அவர்களுடைய தீர்ப்பே முடிவானது.

8. அனுப்பப்பட்ட நுழைவுகளின் முழு உரிமையும் இந்தியன் ஓவர்சீஸ் பாங்கைச் சேர்ந்தது. அவை திருப்பி அனுப்பி வைக்கப்படமாட்டா.

9. ஐஓபியின் பணியாளர்கள், அவர்களுடைய விளம்பர தரகர்கள், மற்றும் இப் படத் தயாரிப்பாளர்கள், அவர்களுடைய நெருங்கிய உறவினர்கள் ஆகியோர் இப் போட்டியில் பங்குபெற தகுதியற்றவர்களாவார்கள்.

10. போட்டியையொட்டி எந்த விதமான கடிதப் போக்குவரத்தும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டா.

11. பரிசுத்தொகை வெற்றி பெற்றவர் ஐஓபியில் வைத்திருக்கும் கணக்குகளில் சேர்க்கப்படும்.

12. பரிசுத் தொகையின் மீது வரிகள் ஏதாவது இருந்தால் அவை வழங்குமிடத்திலேயே கழிக்கப்படும்.

## முடிவு தேதி: அக்டோபர் 31, 1976



# இந்தியன் ஓவர்சீஸ் பாங்க்

உங்கள் வளர்ச்சிக்கோர் உத்தம நண்பன்

IOB-1293



# சிலம்புச் செல்வம்

## ம.பொ.சி

"இல்வாழ்க்கை" என்பது பள்ளியறை நிகழ்ச்சி மட்டும் அல்ல; அறவோர்க்கு அளித்தலும், அந்தணர் ஓம்பலும், துறவோர்க்கு எதிர்தலும், விருந்து எதிர்கோடலும் ஒருவனும் ஒருத்தியும் கூடி நடத்தும் இல்வாழ்க்கையின் சிறந்த நெறிகளாகும். இவற்றை விரிவாகக் கூறாமல் விட்ட அடிகள் கோவலன்—கண்ணகி திருமணத்தை அடுத்து நடந்த முதல் இரவு சந்திப்பை மட்டும் விரிவாகக் கூறுவானேன்? படிப்போர்க்குக் காமச் சுவையை வழங்குவதற்காகவா? இல்லை. அதிலுள்ள தெய்வத் தன்மையைப் புலப்படுத்தவே.

முதல் இரவில் பள்ளியறையிலே நல்ல கலை உணர்வு படைத்த ஒரு காதலன் தன் காதலியை வருணிக்கிறான் என்றால், அதிலே காமரசம் வெளிப்படுவது இந்நாளைய எழுத்தாளரின் வழக்கமாகிவிட்டது. ஆன்ம ஞானியான இளங்கோவடிகள் முதலிரவு நிகழ்ச்சியைக்கூட விரசம் கலவாமல் விமரிசிக்கிறார். கண்ணகியின் உடல் உறுப்புக்களைக் காமனுடைய கரும்பு வில் — இந்திரனுடைய வஜ்ராயுதம் — முருகப் பெருமானுடைய வேலாயுதம் — ஆகிய தெய்வப் படைகளோடு ஒப்பிடுகிறார். கற்புத் தெய்வமாகக் கண்ணகி தோன்றி விட்டதால், இனி ஆண் கற்பும் போற்றப்படும். நால்வருணங்களும் கற்பு ஒழுக்கத்தில் ஊன்றி நிற்கும். அந்நிலையில் காமனுடைய கரும்பு வில்லுக்கு வேலை ஏது? கற்பொழுக்கத்தால் அசுரத்தனம் அழிந்துவிடுமாதலால், தேவேந்திரனுக்கு வஜ்ராயுதம் எதற்கு? முருகனுடைய வேலுக்கும் வேலை இருக்காது. அதனால் காமனும் இந்திரனும் முருகனும் தத்தம் கைகளில் உள்ள ஆயுதங்களைக் கண்ணகியின் உறுப்புகளாக்கி, நிராயுதபாணிகளாகி விட்டனர் என்கிறார் இளங்கோ.

பள்ளியறையிலே — முதலிரவு சந்திப்பிலே— கோவலன் நீராக் காதலில் கண்ணகியின் திருமுகம் நோக்கி, அவளைப் புகழும் வகையில் நீண்ட சொற்பொழிவே நிகழ்த்துகிறான். அந்நிலையிலும் கண்ணகி கோவலனோடு ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. "கண்ணகி" என்பதற்கு 'கண்ணால் நகுபவள்' என்று பொருள் சொல்லப்படுகிறது. அதற்கிணங்க, மாசாத்துவான் மகன் வாயால் காதலுரையாடும் போது, மாநாய்கன் மகள் கண்ணால் பதில் பேசினாள். வள்ளுவரும் "கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல" என்று கூறியிருக்கிறார் அல்லவா?

கம்பராமாயணத்திலே ராமனும் சீதையும் முதலிரவில் சந்தித்தபோது இருவருமே பரஸ்பரம் பேசிக் கொண்டனர் என்று கம்பர் கூறியிருக்கிறார். 'என்கையில் உள்ள கிளிக்கு நான் என்னபெயர் வைக்கட்டும்?' என்று சீதை ராமனைக் கேட்டாளாம். எனவே, காப்பிய நாயகனும் நாயகியும் முதலிரவில் பரஸ்பரம் காதலுரை நிகழ்த்துவது இலக்கிய மரபுதான். அதன்படி கண்ணகியும் கோவலனுடன் பேசியிருப்பாள். அப்படியிருந்தும் இளங்கோ அதைக் கூறாததற்குக் காரணம், அவள் தெய்வப் பாத்திரம் என்பதுதான். காப்பியத்தின் இறுதியிலே கற்புத் தெய்வமாகப் போகிறாள் என்பதால் காதல் வாழ்க்கையிலே அவளை அதிகம் விளையாட விடவில்லை இளங்கோ. அப்படிச் செய்வது பாத்திரத்தின் தெய்வத் தன்மைக்கு இழுக்காகிவிடும் என்று அவர் எண்ணினார்.

கோவலனோடு கண்ணகி வாழ்க்கை நடத்திய ஆண்டுகளிலே அவன் மன நிறைவு பெறும் வண்ணம் அவள் காதல் இன்பம் தரவில்லையென்றும், அதனால்தான் கண்ணகியைக் கைவிட்டு மாதவியின் மனைக்குக் கோவலன் சென்றான் என்றும் சிலர் கூறுகின்றனர். அது பிழையாகும். கண்ணகி — கோவலன் காதல் வாழ்க்கையை இளங்கோவடிகள் விரிவாகக் கூறாததனால், அவர்கள் மனமொத்த காதலர்களாக வாழவில்லை என்ற தவறான எண்ணம் ஏற்பட்டிருக்கிறது. கண்ணகியின் தெய்வத்தன்மையைக் காப்பதற்காக அவள் கோவலனுடன் நடத்திய இல்வாழ்க்கையை இளங்கோ விரிவாகக் கூறாவிடினும், மனையறம் படுத்த காதையின் இறுதியிலே அதை ஒரு வெண்பாவில் சுருக்கமாகக் கூறிவிட்டார்.

தூமப்பணிகள் ஒன்றித்
  தோய்ந்தாலென ஒருவார்
காமர் மனைவியெனக்
  கைகலந்து — நாமம்
தொலையாத இன்பமெலாம்
  துன்னினான் மன்மேல்
நிலையாமை கண்டவர்போல்
  நின்று

இரண்டு பாம்புகள் ஒன்றையொன்று தழுவிப் புணர்ச்சியின்பம் துய்ப்பது போல, கண்ணகியும் கோவலனும் ஊடல் இன்பம் உட்பட உடல் இன்பங்கள் அனைத்தையும் துய்த்தார்கள்; காமனும் ரதியும் போல் காதல் இன்பம் துய்த்தார்கள்; நெடுங்காலம் துய்க்க வேண்டிய இன்பங்களையெல்லாம் யாக்கையின் நிலையாமையை அறிந்தவர்போல் சில ஆண்டுக் கால அளவிலேயே அவசரம் அவசரமாக அனுபவித்து முடித்தார்கள் என்பது வெண்பாவின் பொருள். 'தொலையாத இன்பம்' என்பதிலே ஊடல் இன்பமும் அடங்கியதுதானே!

(தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தின் சார்பில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து.)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேயா காசு



